# ஸ்ரீமோகனதாசரின்

# கோலு ஹாடு

திரு. தாவணகெரெ பீமராவ்
அவர்களின் கன்னட உரையை
அனுசரித்து

தமிழில்

‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்
89044 58276. sathyatv123@gmail.com
jagannathakesava.blogspot.com

ஸ்ரீமோகனதாசரின் கோலு ஹாடு

**பக்கங்கள்** : 120

**விலை** : ரூ.70

தொடர்புக்கு:

‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்

8904458276 sathyatv123@gmail.com

jagannathakesava.blogspot.com

# அறிமுகம்

கோலு ஹாடு - ஸ்ரீமோகனதாசரால் இயற்றப்பட்ட, மத்வ சித்தாந்தத்தை சுலபமான முறையில் விளக்குகிற கன்னட கிரந்தம் ஆகும். ஸ்ரீமோகனதாசர், ஸ்ரீவிஜயதாசரின் பரிபூர்ண அருளுக்குப் பாத்திரரானவர். ஸ்ரீவிஜயதாசரின் சிஷ்யர். அவரின் வளர்ப்பு மகன் ஆவார். ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீமோகனதாசருக்கு சிறு குழந்தையாக இருக்கும்போது அவருக்கு இருந்த வியாதியை பரிகாரம் செய்து, வளர்த்து, ஞானத்தை ஊட்டி, தாசதீட்சை அளித்து, யமலோகம் வரை சென்று அவருக்கு நேர இருந்த அபம்ருத்யுவை பரிகாரம் செய்து அருள் புரிந்துள்ளார். இவ்விதம் ஸ்ரீவிஜயதாசரின் பரிபூர்ண அருளுக்குப் பாத்திரரான ஸ்ரீமோகனதாசர், பலதரப்பட்ட கிருதிகளை கன்னடத்தில் இயற்றியுள்ளார்.

தாசர் இயற்றியுள்ள இந்த ‘கோலு ஹாடு’ 217 பத்யங்களைக் கொண்டதாகும். இதில் தாசர், ஸ்ரீவிக்னேஸ்வரனை பிரார்த்தனை செய்து தொடங்கி, பகவான் ஸ்ரீஹரியின் கேசவாதி 24 ரூபங் களையும், தசாவதார ரூபங்கள், இன்னும் பலதரப்பட்ட அவதார ரூபங்களையும் வர்ணித்து, தாரதம்ய கிரமமாக ஸ்ரீமகாலட்சுமியில் இருந்து துவங்கி, எல்லா தேவதைகளையும், குரு மஹனீயர் களையும் வணங்கித் துதித்து, முக்கியமாக பகவான் ஸ்ரீகிருஷ்ணனின் மகிமைகளைக் கொண்டாடி, விசேஷமாக மகா பாரதத்தின் அஸ்வமேத பர்வத்தின் கட்டமாக வரும் ஸ்ரீகிருஷ்ணன், ருக்மிணி, அர்ஜுனன் மற்றும் சுபத்திரை இவர்களின் சம்வாத ரூபத்தில் கூறப்பட்டுள்ள ஸ்ரீகிருஷ்ணனின் குணங்களைப் பாடி, இறுதியில் இந்த பதத்தில் ஸ்ரவணம் மற்றும் கீர்த்தனை செய்வதன் பலனை எடுத்துக்கூறும் விதமாக, பிரார்த்தனை ரூபத்தில் பகவானிடம் சமர்ப்பணம் செய்து முடித்துள்ளார்.

’கோலு ஹாடு’ என்று பிரசித்தியான இந்த பதத்தில், தாளத்திற்கு ஏற்றவாறு தட்டும் கோலாட்டத்தின் சப்தத்தைக் குறிக்கும் வண்ணம், ‘கோலே’ என்னும் சொல்லை, பகவானின் மகிமைகளைக் கூறி, இன்னும் பிற தேவதைகளையும், குரு

மஹனீயர்களியும் துதிக்கும் தாசர், அவர்கள் அனைவரையும், 'வணங்குகிறேன், சிந்தனை செய்கிறேன்' என்பதைக் கூறும் விதமாக 'பலகொம்பெ' என்னும் பதத்துடன் இணைத்து 'பலகொம்பெ கோலே' என்னும் பதத்தை மீண்டும் மீண்டும் ஒவ்வொரு பத்யங்களிலும் பயன்படுத்தியுள்ளார்.

மோகனதாசரின் 217 பத்ய்ங்களில் அமைந்த இந்த 'கோலு ஹாடு' மத்வமத சித்தாந்தக் கருத்துகளையும், பகவான் ஸ்ரீவிஷ்ணுவின் நற்குணங்களை பறைசாற்றும் விதத்திலும் அமைந்துள்ளது. தாசர் முதலிரண்டு பத்யங்களில் ஸ்ரீவிக்னேஸ்வரனை வணங்கி, பல தரப்பட்ட நைவேத்ய பதார்த்தங்களை படைப்பதாக பிரார்த்தனை செய்து, சகல விதமான விக்னங்களையும் பரிகாரம் செய்யும்படி வேண்டுகிறார்.

3 முதல் 32 பத்யங்களில், பகவான் ஸ்ரீமன் நாராயணனை வணங்கி, விசேஷமாக பகவானின் கேசவாதி 24 ரூபங்களையும், தசாவதாரங் களையும், அனிருத்தாதி பஞ்சரூபங்களையும், விஸ்வாதி 8 ரூபங் களையும், ஹயக்ரீவர், வேதவியாசர், ரிஷபர், தத்தாத்ரேயர் முதலான ஞானத்தை அளிக்கும் ரூபங்களையும் வாசுதேவாதி 4 ரூபங்களையும், அஜாதி 51 மாத்ருகா ரூபங்களையும், ஆத்மாதி 8 ரூபங்களையும் வர்ணிக்கிறார் தாசர்.

33 முதல் 43 பத்யங்களில், தாரதம்ய கிரமத்தில் மகாலட்சுமியில் இருந்து துவங்கி, முறையே பிரம்ம தேவரையும், முக்ய பிராணர், வாணி, பாரதி, கருட, சேஷ மற்றும் ருத்ர பகவானையும், ஜாம்பவதி முதலான ஷண்மஹிஷிகளையும், இந்திரன் மற்றும் காமன் முதலானவர்களையும் துதிக்கிறார் தாசர்.

44 முதல் 57 வரையிலான பத்யங்களில், குருமஹனீயர்களை துதிக்கிறார் தாசர். முறையே ஆசார்யர் ஸ்ரீமத்வர், அவரின் நேரடி சிஷ்யர்களான ஸ்ரீபத்பனாப தீர்த்தர், ஸ்ரீநரஹரி தீர்த்தர், ஸ்ரீமாதவ தீர்த்தர் மற்றும் ஸ்ரீஅக்ஷோப தீர்த்தர் முதலானவர்களையும், ஸ்ரீஜயதீர்த்தரையும் ஸ்தோத்திரம் செய்து, ஸ்ரீவியாசராஜரையும், ஸ்ரீராகவேந்திர குருசார்வ பௌமரையும், ஸ்துதி செய்து, அவர்கள் இருவரின் சரித்திரம், மகிமை மற்றும் கிரந்தங்களைப் பற்றி

சுருக்கமாக விவரிக்கிறார் தாசர். கடைசியாக அபரோக்ஷ ஞானிகளான ஸ்ரீபுரந்தரதாசரையும், தம் குருவான ஸ்ரீவிஜய தாசரையும் வேண்டித் துதித்து, கிரந்தத்தை முன் கொண்டு செல்கிறார் தாசர்.

58 முதல் 75 வரையிலான பத்யங்களில், பகவானின் மகிமையைக் கூற விளையும் தாசர், முக்கியமாக பகவான் ஸ்ரீகிருஷ்ணனின் அவதார நோக்கம், அவதரித்த விதம், பூதனை, கம்சன் முதலானவர் களின் வதம், ஜராசந்தனை மீண்டும் மீண்டும் தோற்கடித்து, காலயவனனை தண்டித்து, த்வாரகாபுரியை நிர்மாணம் செய்த விதத்தை வர்ணித்து, 16,108 பத்னிகளுடன் த்வாரகையில் பகவான் வாசம் செய்த விதத்தையும், லீலைகளையும், இந்திராதி தேவதைகள், அஷ்டதிக் பாலகர்கள் தத்தம் ஆயுதங்களுடன், பத்னியர் சமேதமாக, த்வாரகைக்கு விஜயம் செய்து பகவானை தரிசித்து வணங்கியதை தாசர் மிக அழகாக விவரித்துள்ளார்.

76 முதல் 94 வரையிலான பத்யங்களில் முறையே ஹரிசர்வோத்த மத்வம், வாயுஜீவோத்தமத்வம், இதனை தேவதைகள் கோஷம் செய்யும் விதம், ஏகாதசி உபவாசம், பாகவத சிரவணம், சஜ்ஜனர் களின் சங்கம் முதலானவைகளின் முக்கியத்துவத்தையும், பஞ்ச பேதம், தாரதம்யம் முதலான தத்துவங்களையும் விளக்கி, பல தரப்பட்ட எளிமையான உதாரணங்களுடன் கேள்விகளை எழுப்பி, ஜீவ ஈஸ்வர ஐக்கிய சித்தாந்தத்தைக் கண்டனமும் செய்கிறார்.

94 முதல் 120 வரையிலான பத்யங்களில், பகவான் விசேஷமாக வாசம் புரியும் ஸ்வேதத்வீபம், அனந்தாசனம் மற்றும் வைகுண்டம் முதலான 3 லோகங்களையும், சாரூப்ய, சாலோக்ய, சாமீப்ய, சாயுஜ்ய மற்றும் சாரிஷ்டி முதலான முக்தர்களின் நான்கு நிலை களையும் கூறி, அங்கு வாசம் செய்யும் முக்தர்களின் லட்சணம், அவர்கள் செய்யும் பகவத் ஆராதனை மற்றும் பகவான் அவர்களுக்கு புரியும் அருள், இவற்றைப் பற்றி வர்ணிக்கிறார் தாசர்.

121 முதல் 208 வரையிலான பத்யங்களில், பாரதத்தின் அஸ்வமேத பர்வத்தில் வரும் ஸ்ரீகிருஷ்ணன், ருக்மிணி, அர்ஜுனன் மற்றும் சுபத்திரை ஆகியோரிடையே நடக்கும் சம்பாஷணைகளின்

மூலமாக ஸ்ரீஹரியின் குணங்களை விளக்குகிறார் தாசர். நிந்தா ஸ்துதியில் பாடப்பட்ட அழகான இந்த பத்யங்களில் ஸ்ரீகிருஷ்ணனின் சர்வோத்தமத்வம், காருண்யம், முதலான குணங்களை, அவன் சகலவிதமான தோஷங்களுக்கும் அப்பாற் பட்டவன் என்பதையும் சகஜமாக, எளிமையாக, உதாரணங்களுடன் தாசர் விளக்குகிறார். இறுதியாக அர்ஜுனனும், சுபத்திரையும், ஸ்ரீருக்மிணி ஸ்ரீகிருஷ்ணரை வணங்கி, பிரார்த்தனை செய்து, பரஸ்பரம் பரிசுகளை பரிமாறிக் கொள்ளும் கட்டத்துடன் இந்தப் பகுதி முடிவடைகிறது

208 முதல் 212 வரையிலான பத்யங்களில், தாசர், இந்த கிரந்தத்தின் பல-ஸ்ருதியை உரைக்கும் விதமாக நம் அனைவரின் சார்பிலும் பகவானிடத்தில் பிரார்த்தனை செய்து, இதை படிப்பவர்களுக்கும், கேட்பவர்களுக்கும் பிறப்பு இறப்பு துன்பங்களிலிருந்து விடுதலை கிடைக்கட்டும் என்பதையும், சஜ்ஜனர்களுக்கு கஷ்டங்கள் எல்லாம் விலகி, நன்மைகள் பயக்கட்டும் என்பதையும் உரைக்கிறார்.

214ம் பத்யத்தில், தாம் இந்த பத்யத்தை இயற்றிய நாளை ஸ்ப்ஷ்டமாக 'பார்த்திவ நாம சம்வத்சரம், கார்த்திக கிருஷ்ண ஏகாதசி வியாழன்' என்பதைக் கூறி, 215ம் பத்யத்தில் உத்திராதி மடத்து அப்போதைய பீடாதீசரான ஸ்ரீசத்யபூர்ண தீர்த்தரின் கருணையாலே இந்த கிரந்தம் முழுமையடைந்தது எனக்கூறி அவரை பிரார்த்தித்து, 216ம் பத்யத்தில் மீண்டும் தனக்கு உயிர் பிச்சை அளித்து, தீட்சை, ஞானம் அளித்த ஸ்ரீவிஜயதாசரை வேண்டி, முடிவில் கடைசி பத்யத்தில் ஸ்ரீவேங்கடேசனிடத்தில் சஜ்ஜனர் களுக்காக பிரார்த்தனை செய்து, மங்களம் அருளச்செய்ய வேண்டி பூர்த்தி செய்கிறார் தாசர்.

ஸ்ரீமோகனதாசரின் இப்பேற்பட்ட அற்புதப் படைப்பினை படித்து, கேட்டு, பாராயணம் செய்து, அதன் விசேஷ அர்த்தங்களை தெரிந்து கொண்டு ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளுக்கு பாத்திரராவோமாக.

இத்தகைய உயரிய 'கோலு ஹாடு' பத்யத்தின் ஒவ்வொரு பதபத அர்த்தங்களையும், பாமரரும் அறியும் வண்ணம் கன்னடத்தில் திரு.தாவணகெரெ பீமராவ் அவர்கள் இயற்றியுள்ளார். அத்தகைய

பொக்கிஷத்தை, தமிழ்வாழ் பகவத் பக்தர்களுக்கும் கொண்டு சேர்க்க வேண்டும் என்ற உயரிய நோக்கத்துடன் 'ஜகன்னாத கேசவ' திரு. சத்ய நாராயணன் அவர்கள் தமிழில் மிக அழகாக மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். சமீபகாலத்தில் அவர் வெளியிட்ட இன்னும் பிற மொழிபெயர்ப்பு நூல்களான ஸ்ரீஹரியின் 40 அவதாரங்கள், ஐந்து பரிசுத்த தேவதைகள், ஸ்ரீசத்யபோத தீர்த்தர், ஸ்ரீசத்யத்யான தீர்த்தர் போன்ற நூல்களின் வரிசையில், இதுவும் அவருக்குப் பெருமை சேர்க்கும் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. அவருக்கு ஸ்ரீமோகனதாசர் குருவந்தர்கத ஸ்ரீபாரதிரமண முக்யபிராணாந்தர்கத ஸ்ரீமோகனவிட்டலன், ஆயுள், ஆரோக்யம், ஐஸ்வர்யம் மற்றும் மனச்சாந்தி இவைகளை அருள வேண்டும். இதுபோல அனேக மொழிபெயர்ப்புகளை செய்ய வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறேன்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

மேடவாக்கம், சென்னை **'ப்ரஸங்க பூஷணம்'**

19-02-2020 **S.லட்சுமிபதிராஜா**

## என்னுரை

இந்த அற்புத கிரந்தத்தை எனக்கு பாடம் சொல்லிக் கொடுத்த குரு திரு. ஹரதி பிரகலாதாச்சார் அவர்களுக்கும், முன்னுரை எழுதிக் கொடுத்த திரு.லட்சுமிபதிராஜா அவர்களுக்கும், என் அனைத்து முயற்சிகளுக்கும் வழிகாட்டியாக இருந்து ஊக்குவித்து வரும் திரு.குரோம்பேட்டை R.ஸ்ரீதரன் ஐயா அவர்களுக்கும் என் அனந்தானந்த நமஸ்காரங்கள். நன்றிகள்.

ஸ்ரீமோகனதாசரின் கோலுஹாடுவை தமிழில் மொழிபெயர்த்து வெளியிட எனக்கு ப்ரேரணை செய்து, அதன்படியே நடத்திய, குருவந்தர்கத பாரதிரமண ஜகன்னாத கேசவனுக்கு இதை சமர்ப்பிக்கிறேன்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**ஆகாஷகபி4மானி ஸ்ரீகண்ட2வரபுத்ர**
**ஏகதந்தனெ விக்4னேஷ கோலெ**
**ஏகதந்தனெ விக்னேஷ நின்ன பத**
**ஏகசித்ததலி ப3லகொ3ம்பெ3 கோலெ ||1**

ஆகாஷகபிமானி = பஞ்சபூதங்களில் முதலாவதான 'ஆகாச' தத்வத்தின் அபிமானி தேவதை, விக்னேஷ்வரன். ஸ்ரீகண்ட வரபுத்ர = மகாருத்ரரின் மூத்த மகன். ஏகதந்தனெ = யானை முகத்துடன், ஒரு தந்தத்துடன் இருப்பவன். பலகொம்பெ = உன் அருளால், விபத்துகளை வெல்லும் பலம் உள்ளவனாகிறேன். தன்னை (தனது அந்தர்யாமியான விஷ்வம்பரரூபி ஸ்ரீஹரியை) பூஜிப்பவர்களின் விக்னங்களை பரிகரிப்பவன் கணபதி.

**நெனெயக்கி நெனெக3ட3லெ கொ3னெய பா3ளெய ஹண்ணு**
**க4னவாத3 சிகுளி த1ம்பி3ட்டு1 கோலெ**
**க4னவாத3 சிகுளி த1ம்பி3ட்டு1 தந்தீவெ**
**கணபதி மதிய கருணிஸு கோலெ ||2**

தந்தீவெ = ஸ்ரீஹரி கொடுத்த பொருட்களில் உனக்கு ப்ரிய கரமான இவற்றை (அரிசி, கடலை, வாழைப்பழம், தம்பிட்டு ஆகியவற்றை) தயார் செய்து, உனக்கு சமர்ப்பிக்கிறேன். மதிய கருணிஸு = நற்புத்தியை கொடு. கோலெ = தாளத்திற்கு ஏற்ற வாறு தட்டும் கோலாட்டத்தின் சப்தத்தை குறிக்கும் சொல். வெவ்வேறு தேவதைகளுக்கு வெவ்வேறு பொருட்களின் நைவேத்தியம் இஷ்டம் ஆகையால் கணபதிக்கு பிடித்த மானவற்றை இங்கே சமர்ப்பிப்பதாக தாசர் கூறுகிறார்.

**ஜகதுத்பத்தி ஸ்தி2திலயகெ காரணனாத**
**ஜகதீஷ ஜான்ஹவி ஜனகனெ கோலெ**
**ஜகதீஷ ஜான்ஹவி ஜனக நாராயண**
**நக3த4ரன முன்னு ப3லகொ3ம்பெ3 கோலெ ||3**

அனைத்து உலகங்களின் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய வற்றிற்கு ஒரே காரணனான, ஸ்வதந்த்ரனான 'ஜகதீஷ', அவனே

ஸ்ரீவிஷ்ணு, நாராயணன். ஜான்ஹவிஜனக = விஷ்ணுவின் பாதங்களிலிருந்து தோன்றியதால், விஷ்ணுவிற்கு ஜான்ஹவி ஜனக என்று பெயர். பகீரதன் வெகு சிரமப்பட்டு பூமிக்கு வர வழைத்த கங்கையை 'ஜன்ஹு' என்னும் ரிஷி, தன்னுடைய ஆசிரமத்தில் வந்த வெள்ளத்தை கட்டுப்பட்டுத்த, விழுங்கினார். பிறகு பகீரதனின் பிரார்த்தனைக்கேற்ப, தன் காது வழியாக கங்கையை வெளியில் விட்டார். ஜன்ஹுவினால் மறுபடி பிறந்ததால், கங்கைக்கு ஜான்ஹவி என்று பெயர்.

**மச்ச கூரும வரஹ நரசிம்ஹ வாமன**
**ஸ்வச்ச ப்ருகுராம ரகுராம கோலெ**
**ஸ்வச்ச ப்ருகுராம ரகுராம க்ருஷ்ண பௌத்த**
**அச்சகல்கிய ப³லகொ³ம்பெ³ கோலெ ||4**

மத்ஸ்ய, கூர்ம, வராக, நரசிம்ம, வாமன, பரசுராம, தாசரதிராம, கிருஷ்ண, புத்த மற்றும் கல்கி என்னும் தசாவதாரங்கள், பிரம்ம தேவரின் அனைத்து பகல் வேளையிலும் நடக்கின்றன. பல கொம்பெ - வணங்கி, மத்ஸ்யாதி ரூபங்களினால் அத்யந்த அபின்னனான ஸ்ரீஹரியை சிந்தனை செய்கிறேன்.

**ஈஷபிரம்மரிகெ நியாமகனாகி³த்து³**
**போஷிசுதிப்ப பரமாத்ம கோலெ |**
**போஷிசுதிப்ப பரமாத்மனாத ஸ்ரீ**
**கேசவன மொதலெ ப³லகொ³ம்பெ³ கோலெ ||5**

இந்த நுடியிலிருந்து கேசவாதி 24 பகவத்ரூபங்களின் மகிமை களை வர்ணிக்கிறார் தாசர். அந்த மகிமைகளை அறிந்து, அந்த ஞானத்துடன் சிந்தனை செய்வதே (வணங்குவதே) உபாசனை யாகும். அபரோக்ஷ தரிசனத்திற்கு உதவும் ரூபங்கள் அனைத்தும் ஒன்றேயானாலும், ஸ்ரீஹரியின் பல ரூபங்களின் தியானத்தால், அபரோக்ஷத்திற்கு முன், ஸ்ரீஹரியின் ஸ்வ யோக்ய, குணங்களைப் பற்றிய ஞானம் கிடைக்கிறது.

அதற்காகவே ஸ்ரீஹரியின் பல ரூபங்களின் மகிமைகளை அறியவேண்டும்.

பிரணவமானது (ஓங்காரம்) ஸ்ரீஹரியின் குணபூர்த்தியை பிரதிபலிக்கிறது. அகாரம், உகாரம், மகாரம், நாத, பிந்து, கோஷ, ஷாந்த, அதிஷாந்த என்னும் 8 வர்ணங்களைக் கொண்டதே ஓங்காரம். 'ஓம் நமோ நாராயணாய' என்னும் நாராயண அஷ்டாக்ஷரத்தின் 8 எழுத்துகள், பிரணவத்தின் 8 எழுத்துக்களின் அர்த்தத்தையே (முறையாக) சொல்கிறது. நாராயண அஷ்டாக்ஷரத்தின் 8 எழுத்துகள் மற்றும் பூ: புவ: ஸ்வ: என்னும் வியாஹ்ருதிகளின் 16 எழுத்துகளுடன் சேர்ந்து மொத்தம் 24 எழுத்துக்களால் 24 எழுத்துக்களுடைய 'வேத மாத்ரு' என்னும் (அத்யயனம் செய்பவர்களுக்கு பிராம்மணத்வத்தை பெற்றுக் கொடுக்கும் மற்றும் வேதங்களை காப்பதால் மாத்ரு ஸ்தானத்தில் இருக்கும்) காயத்ரி மந்திரம் வருகிறது. கேசவாதி 24 ரூபங்கள், காயத்ரியின் 24 எழுத்துக்களால் குறிப்பிடப்படுகிறது.

இத்தகைய கேசவாதி மூர்த்திகளின் மகிமைகள், தந்த்ரசாரத்தில் விளக்கப்பட்டுள்ளது.

நாராயணாஷ்டாக்ஷராஸ்ச வ்யாஹ்ருதி த்ரிகுணாத் புன: |
வேதமாதா து காயத்ரி த்விகுணா த்வாதஷாக்ஷராத் |
சதுர்விம்ஷன் மூர்த்தயோऽஸ்யா:கதிதா வர்ணதேவதா: |

ஈஷ பிரம்மருக்கு நியாமகனான ஸ்ரீஹரி, க:-பிரம்ம, ஈஷ-ருத்ர. கேசவாதி பல நாமங்களைக் கொண்டுள்ளான்.

**நீரிகாஸ்ரயனாகி நீரொளு மலகிப்ப**
**நீரஜ நேத்ர நிக³மாத்ம கோலெ**
**நீரஜ நேத்ர நிக³மாத்மனாத ஸ்ரீ**
**நாராயணன்ன ப³லகொ³ம்பெ³ கோலெ ||6**

ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூனவ: |
அயனம் தஸ்ய தா: பூர்வம் தேன நாராயண: ஸ்ம்ருத: ||

அழிவு இல்லாதவன் ஆகையால், ஸ்ரீவிஷ்ணு ’நர’. அவனிடமிருந்து அனைத்தும் படைக்கப்பட்டதால், ‘ஆப:’, நீரானது நாரா என்று பெயர் பெற்றது. ஸ்ருஷ்டிக்கு முன்னர், ஸ்ரீஹரி நீரிலேயே வாசம் செய்ததால் (பிரளயகாலத்தில் தண்ணீரில் படுத்திருந்த காரணத்தால்) விஷ்ணு, ‘நாராயணன்’ என்று அழைக்கப்படுகிறார். நீரஜ நேத்ர = தாமரை போன்ற கண்களை உடையவன். நிகமாத்ம = வேதங்களால் புகழப்படுபவன் அல்லது வேதங்களுக்கு அபிமானினியான மகாலட்சுமியின் ஸ்வாமி.

**யாதவ குலஜனெ சாது[4]களரஸனெ**
**மாதேவிகாஸ்ரயனாகிப்ப கோலெ**
**மாதேவிகாஸ்ரயனாகி பாலிஸுவ**
**மாத[4]வன்ன மொதலெ ப[3]லகொ[3]ம்பெ[3] கோலெ ||7**

மாதவ = யது வம்சத்தில் பிறந்து, மது நாமக அரக்கனைக் கொன்றதால், ஸ்ரீகிருஷ்ணன் ‘மாதவன்’. மா = லட்சுமிரூபியான ருக்மிணி. அவளின் ஸ்வாமியான ஸ்ரீகிருஷ்ணன் மாதவன். சாதுகளரஸனெ = சஜ்ஜனர்களை / பக்தர்களை ஒரு அரசனைப் போல, அனைத்து விதங்களிலும் காப்பாற்றும் / மேம்படுத்தும், ஹே கிருஷ்ணனே.

**சந்ததிந்த வேதவ்ருந்த ப்ரதிபாத்யனெ**
**இந்திராதேவி ரமணனெ கோலெ**
**இந்திராதேவி ரமணனாத கோ**
**விந்தன மொதலெ ப[3]லகொ[3]ம்பெ[3] கோலெ ||8**

கோவி: = வேத வாக்கியங்களால் விந்ததே, லப்யதே = கிடைக்கிறான். வேதங்களில் புகழப்படுகிறான் / வேதங்களில் இருக்கிறான். வேதங்களை தவிர்த்துவிட்டு, வெறும் அனுமானங்களினால் மட்டுமே அறியப்படக்கூடியவன் அல்ல.

**ஸ்ருஷ்டியொளகெல்ல வ்யாப்தனாகிருதிப்ப**
**வைஷ்ணவகுலகெ திலகனெ கோலெ**
**வைஷ்ணவகுலகெ திலகனாத ஸ்ரீ**
**விஷ்ணுவின மொதலெ ப$^3$லகொ$^3$ம்பெ$^3$ கோலெ ||9**

ஞானானந்தாதி குணங்களால் அனைத்து காலங்களிலும், இடங்களிலும் நிரம்பியிருப்பவன் ஆகையால், பரமாத்மனுக்கு ‘விஷ்ணு’ என்று பெயர். அனைத்து ஹரிபக்தர்களுக்கும் திலக (தலைவன்), சர்வோத்தமன், ‘விஷ்ணு’ என்னும் பெயரின் பல அர்த்தங்கள், ஐதரேய பாஷ்யத்தில் விளக்கப்பட்டுள்ளது. ’ஷ’ -> ரமா, பிரம்ம, ருத்ராதி அனைத்து தேவதைகளுக்கும் அருள்பவன் என்றும்; ’ண’ -> வலிமையான ரூபத்தையும்; ‘வி’ -> உத்தம மானவன் என்றும், இறுதியில் இருக்கும் ‘உ’ -> இந்த அனைத்து விஷயங்களையும் கொண்டிருப்பவன் என்றும் சொல்கிறது. மொதலெ என்று சொல்வதால், ஸ்ரீஹரியை வணங்குவது என்பது, அனைத்து கடமைகளில் மிகவும் முக்கியமான கடமை என்று கூறுகிறார் தாசர்.

**அத$^4$மனாகித்தந்த$^2$ அசுரன சம்ஹரிஸி**
**முத$^3$வ பீ$^3$ரித$^3$னெ சுரரிகெ கோலெ**
**முத$^3$வ பீ$^3$ருத$^1$ சுரர பாலிசுவந்த**
**மதுசூதனன ப$^3$லகொ$^3$ம்பெ$^3$ கோலெ ||10**

மது என்னும் அரக்கனைக் கொன்றதால், ஸ்ரீஹரி மதுசூதனன். சூதா என்றால் சஜ்ஜனர்கள். அவர்களில் உத்தமமானவர்களுக்கு (தேவதைகளுக்கு), மதுவை (சுகத்தை) கொடுப்பவன் ஆகையால், அவன் மதுசூதனன். இந்த இரு மகிமைகளும் இந்த ஸ்லோகத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

**சிக்கபிராம்மணனாகி பலிய தா$^3$னவ பே$^3$டி$^3$**
**ஆக்ரமிஸிதனெ த்ரிலோகவ கோலெ**
**ஆக்ரமிஸி த்ரிலோகவனளெத த்ரி**
**விக்ரமன்ன மொதலெ ப$^3$லகொ$^3$ம்பெ$^3$ கோலெ ||11**

மொதலெ = அனைத்து கடமைகளையும் செய்வதற்கு முன்னர், சிறிய (குள்ளமான) வடுவாக வந்து, பலி சக்ரவர்த்தியிடம் தானம் பெற்று, அவனுக்கு அருள்வதற்காக, மற்றும் உலகத்தில் அவன் புகழை பரப்புவதற்காக, வாமனனான தான் த்ரி-விக்ரமனாக வளர்ந்தான். மூன்று அடி நிலத்தை தானமாகப் பெற்று, தன் ஒவ்வொரு பாதங்களால் ஒவ்வொரு உலகத்தையும் அளந்து, தானமாகப் பெற்றுக் கொண்டான்.

**பூமியொளகெ அதிசம்ப்ரமனாகித்து**
**காமிதார்த்த$^{2}$ங்கள கரெவனெ கோலெ**
**காமிதார்த்த$^{2}$ங்கள கரெது ப$^{4}$க்தர பொரெவ**
**வாமனன்ன மொதலெ ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||12**

வாமனன் என்றால் வேண்டும் சுகங்கள் / விருப்பங்கள் அனைத்தையும் கொடுப்பவன் என்று பொருள். மோட்சத்திற்கு எதிரிகளான தைத்யர்களை, தமஸ்ஸிற்கு அனுப்புகிறவன் ஆகையாலும், ஸ்ரீஹரி வாமனன் என்று அழைக்கப்படுகிறான்.

**வேதாபி$^{4}$மானிகெ ஸாத$^{3}$ரவாகிப்ப**
**பௌத்த$^{4}$மூருதியெ ப$^{4}$வதூ$^{3}$ர கோலெ**
**பௌத்தமூர்தியெ ப$^{4}$வதூ$^{3}$ரனாத ஸ்ரீ**
**ஸ்ரீதரன மொதலெ ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||13**

ஸ்ரீ என்று அழைக்கப்படும், வேதங்களுக்கு அபிமானினியான மகாலட்சுமிக்கும்கூட தலைவனானவன், ஸ்ரீதரன். லட்சுமியை எப்போதும் தன் மார்பில் தரித்திருப்பவன் ஆகையால், அவன், ஸ்ரீதரன். பௌத்த மூர்த்தியே, ஞானஸ்வரூபன். அவனே ஸ்ரீதரன் என்கிறார் தாசர்.

**சாகாரமூருதி சர்வேந்திரிய நியாமக**
**நாகேஷவந்த்ய நளினாக்ஷ கோலெ**
**நாகேஷவந்த்ய நளினாக்ஷனாத ஹ்ரு**
**ஷீகேஷ ஹரிய ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||14**

இந்திரியங்களின் (ஸ்வதந்த்ரனான) நியாமகன், ஸ்ரீஹரி. அனைத்து சுகங்களையும் பெற்றவன். ரமா, பிரம்ம, ருத்ரர் முதலான தேவதைகளால் வணங்கப்படுபவன், ஆகையால் அவன் ஹ்ருஷிகேஷன்.

**பதுமசம்ப$^{4}$வபித பதுமினிவல்லப$^{4}$**
**பது$^{3}$ம பொக்குளலி படெதனெ கோலெ**
**பது$^{3}$ம பொக்குளல்லி படெது பாலிஸுவந்த**
**பதுபனாபன முன்னெ ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||15**

முன்னெ = அனைத்தையும் ஸ்ருஷ்டிக்கும் முன்னரே (அதாவது எந்தவொரு வேலையையும் செய்யத் துவங்கும் முன்னர் நாம் ஸ்ரீஹரியை நினைக்க வேண்டும் என்று உணர்த்துகிறது), பதுமசம்பவ = சதுர்முக பிரம்மனை, பதுமினி = ஸ்ரீமகாலட்சுமி, பதும = தாமரை, பொக்குளல்லி படெதனெ = தன் நாபியில் கொண்டான், அவனே பத்மனாபன்.

**காமினி யஷோதெ ஒரளிகெ கட்டலு**
**ஸ்ரீமனோஹர ஸெளெதொய்த கோலெ**
**ஸ்ரீமனோஹர ஸெளெது பாபவ களெத**
**தாமோதரன்ன ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||16**

வயிற்றில் (உதரத்தில்) கயிறு கொண்டிருப்பவன், தாமோதரன். பாலகிருஷ்னனின் குறும்புகளை பொறுக்காமல், யசோதை யானவள் கயிற்றினால் அவனைக் கட்டி, அதை ஒரு உரலில் கட்டி வைத்தாள். அதற்கே தாமோதரன் என்று பெயர் பெற்றான். செளெது = பாவங்களைக் களைந்து. அதாவது அந்த உரலை இழுத்துப் போய் ஒரு சாபத்தினால் மரங்களாகி நின்றிருந்த குபேரனின் இரு மக்களான நளகூபர் மற்றும் மணி க்ரீவர் ஆகியோரின் நடுவில் சென்று, அந்த மரங்களை வீழச் செய்து, அவர்களின் சாபத்தைப் போக்கினான்.

**கிங்கரர சித்த துர்விஷயக்கெரகலு**
**பங்கஜனாப ஸெளெதனெ கோலெ**
**பங்கஜனாப ஸெளெது தன்னல்லிடுவ**
**சங்கர்ஷண ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||17**

பக்தர்களின் மனதை (சித்தத்தை) கெட்ட விஷயங்களிலிருந்து அகற்றி, வைராக்கியத்தை அவர்களுக்கு வழங்குகிறான். சங்கர் ஷணனின் தயவு இல்லாமல் வைராக்கியம் இல்லை. அது இல்லாமல், ஞான பக்திகள் இல்லை. ஆகையால், முக்தியை விரும்புபவர்கள் வைராக்கியத்தை வேண்ட வேண்டும். சொந்த முயற்சியால் அது கிடைப்பதில்லை. துர்விஷயங்களின், தகாத விஷயங்களின் மேல் உள்ள ஆசையை விடவேண்டும். இறை யருளால் கிடைத்த பொருட்களை வைத்து திருப்தியடைய வேண்டும். இதுவே வைராக்கியம்.

**ஏஸு பிரம்மாண்டதொளு வாஸவாகிருதிப்ப**
**தாஸவர்க$^{3}$வனெ பொரெவனெ கோலெ**
**தாஸவர்க$^{3}$வனெ பொரெவனெ நம்ம ஶ்ரீ**
**வாசுதேவன்ன ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||18**

மனிதப் பிறவியைப் பெற்று மோட்சத்திற்கான வழிகளில் ஈடு பட்டிருக்கும் தாச வர்க்கத்தவர்களுக்கு (தனது பக்தர்களுக்கு), முக்தியை கொடுக்கவல்ல, சர்வதந்த்ர ஸ்வதந்த்ரனும், பிரம்மாண்டத்தில் (அனந்த கோடி பிரம்மாண்ட உலகங்களில்) வியாபித்திருப்பவனான, வாசுதேவ நாமகனே, ஶ்ரீஹரி. வசு தேவனின் மகனாகப் பிறந்ததால் வாசுதேவன் என்று பெயர் பெற்றான். அனாதி காலத்திலிருந்து படைக்கப்பட்ட அனைத்து பிரம்மாண்டங்களையும் படைத்தவன் வாசுதேவன்.

**முத்துமோகத தெய்வ அத்வைத மஹிமனெ**
**சத்வைஷ்ணவர பொரெவனெ கோலெ**
**சத்வைஷ்ணவர பொரெவனெ அஜனய்ய**
**பிரத்யும்ன ஹரிய ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||19**

முத்துமோகத= அழகிய தேகத்தைக் கொண்டவன். ஶ்ரீஹரியின் அனைத்து ரூபங்களும் 32 சுலட்சணங்களைக் கொண்ட அழகான ரூபங்களே. ஆனாலும், மன்மனதனின் சௌந்தர்யத் திற்கு காரணமான பிரத்யும்ன ரூபத்தையே இங்கு வர்ணிக் கிறார். ரதிபதியான மன்மதனிடம் பிரத்யும்னனின் சௌந்தர்யம் அப்படியே வந்திருக்கிறது என்பதை கவனிக்க வேண்டும். இதனால், மன்மதன், பிரத்யும்னன் என்றும் அழைக்கப்படுகிறான்.

அத்வைத மஹிமனே = சற்றும் குறைவோ, அதிகமோ இல்லாத மகிமைகளைக் கொண்டவன் ஶ்ரீஹரி. முக்திக்கு தகுதியுடைய, விஷ்ணுபக்தியுள்ளவர்களை, ஶ்ரீஹரி எல்லா விதங்களிலும் காப்பாற்றுகிறான். அஜனய்ய = பிரம்மனின் தந்தை. அஜ = 'அ'கார நாமம் கொண்ட விஷ்ணுவிடமிருந்து பிறந்தவன்.

**அனிமிஷதைத்யர மனகெ[1] ஸிலுக[1]தி[3]ப்ப[1]**
**ஸனகாதிவந்த்ய சகலேஷ கோலெ**
**ஸனகாதிவந்த்ய சகலேஷனாகிப்ப**
**அனிருத்த ஹரிய ப[3]லகொ[3]ம்பெ[3] கோலெ ||20**

அனிமிஷதைத்யர மனகெ ஸிலுகதிப்ப = தேவர்கள், தைத்யர்கள் என யார் மனதிற்கும் எட்டாதவன். அவர்களால் எப்போதும் அறியப்பட முடியாதவன். யாரின் உதவியும் தேவைப்படாதவன். சனகாதி வந்த்ய = முக்யபிராணரையே ஸ்வாமியாக கொண்டவர்களான, சனகாதி அனைவராலும் வணங்கப்படுபவன். அனிருத்தன் = தியானத்தினால் கட்டுப் படுபவன், ஆகையால் அவன் அனிருத்தன். வேதத்திற்கு எதிராக செயல்களை செய்யக்கூடியவர்களை கொல்பவன், ஆகையால் அவன் அனிருத்தன்.

**க்ஷராக்ஷரதொளு பரமோத்தமனாத**
**கரிராஜவரத கவிகே[3]ய கோலெ**
**கரிராஜவரத கவிகே[3]யனாத ஶ்ரீ**
**புருஷோத்தமன்ன ப[3]லகொ[3]ம்பெ[3] கோலெ ||21**

க்ஷர மற்றும் அக்ஷர ஜீவர்களில், உத்தமனானவன் புருஷோத்தமன். அழியும் தேகத்தைக் கொண்ட ஜீவர்கள் / பிராணிகள், க்ஷரர்கள். எவ்வித நாசமும் இல்லாத, நித்ய சிதானந்த ஸ்வரூபியானவள் ஸ்ரீமகாலட்சுமி, அக்ஷரபுருஷள். இந்த இருவரைவிட சர்வோத்தமனே புருஷோத்தமன்.

யஸ்மாத் க்ஷரமதிதோsஹம் அக்ஷராதபி சோத்தம: |
அதோsஸ்மி வேதே ச ப்ரதித: புருஷோத்தம: ||
(கீதை ஸ்லோகம்)

புருஷாப்யாம் உத்தம: - புருஷோத்தம: கரிராஜவரத = கஜேந்திர யானையைக் காப்பாற்றியவன் (பக்தர்களில் குரலைக் கேட்ட வுடன் அதே நொடியில் வந்து காப்பாற்றுபவன்). கவிகேய = சதுர்முக பிரம்மனால் வணங்கப்படுபவன் (பிரம்மனே ஆதிகவி. அவருக்கு சமமான எந்தவொரு கவியும் / ஞானியும் ஜீவர் களில் இல்லை.

**அக்ஷயமூருதி மோக்ஷதா³யக ஸ்வாமி**
**குக்ஷியோள் ஜகவ ரக்ஷிப கோலெ**
**குக்ஷியோள் ஜகவ ரக்ஷிப நம்ம அ**
**தோக்ஷஜ ஹரிய ப³லகொ³ம்பெ³ கோலெ ||22**

அக்ஷயமூருதி = நாசமடையாத தேகம் உள்ளவன். (தேக நாசம், துக்கமடைதல், குறைகள் ஆகியவை இல்லாதவனே அக்ஷயமூருதி). குக்ஷியொள் = வயிற்றில் (பிரளய காலத்தில் சேதன அசேதனங்கள் நிறைந்த ஜகத்தினை, தன் வயிற்றில் வைத்து காப்பாற்றி, மறுபடி ஸ்ருஷ்டி காலம் வரும்போது, அந்த உலகத்தைப் படைப்பவனே, ஸ்ரீஹரி). மேலும், இந்த உலகத்தை எப்போதும் பாதுகாத்து வருவதால், ஸ்ரீஹரி ‘ஜகதுதரன்’ என்று அழைக்கப்படுகிறான்.

அதோக்ஷ = ஹனுமந்தன். அவன் மூலமாகவே ஸ்ரீஹரியின் சாக்ஷாத்காரம் (தரிசனம்) கிடைப்பதால், ஸ்ரீஹரிக்கு அதோக்ஷஜன் என்று பெயர். அபரோக்ஷம் மூலமாகவே

மோக்ஷம். வாயுதேவனை மகனாகக் கொண்டவன் அதோக்ஷஜன். இன்னொரு பொருள் = இந்திரியங்களால் ஞானத்தைப் பெறுபவன் அல்ல. அதாவது நிரந்தர ஞானம் உள்ளவன் என்பதே அதோக்ஷஜன் என்பதற்கு அர்த்தம்.

**க்ரூரக2ளானுதர ஸீளி ப்ரஹ்லாதன**
**காருண்யதிந்த காய்தனெ கோலெ**
**காருண்யதிந்த காய்தனெ நம்ம ஸ்ரீ**
**நாரசிம்ஹன ப3லகொ3ம்பெ3 கோலெ ||23**

க்ரூரகளன = உக்ரனான துஷ்ட ஹிரண்யகனை. ஸீளி = கொன்று, பிரகலாதனை மிகக் கருணையுடன் காத்தவன், நாரசிம்ஹன்ன = நரசிம்மனை.

**சச்சிதானந்தனெ சகலகுணபூர்ண**
**முசுகுந்த வரத முனினுத கோலெ**
**முசுகுந்தவரத முனினுதவாத ஸ்ரீ**
**அச்யுதன மொதலெ ப3லகொ3ம்பெ3 கோலெ ||24**

சச்சிதானந்தனெ = சுத்தமான ஞானானந்தாதிகளே தேகமாகக் கொண்டவன். சகலகுணபூர்ணன் = அனைத்து நற்குணங் களையும் (ஒவ்வொன்றையும் பூரணமாகக்) கொண்டவன். அச்யுதன் = அழிவில்லாதவன்.

**துர்த4ர்ஷராகி3த்த3 க2ளர சமுதாயவ**
**மர்த3ன மாடித மஹாமஹிம கோலெ**
**மர்த3ன மாடித மஹாமஹிமனாத ஜ**
**நார்த்தன்ன மொதலெ ப3லகொ3ம்பெ3 கோலெ ||25**

துர்தர்ஷ = யாராலும் அழிக்கப்பட முடியாத, களர = துஷ்டர் / அரக்கர்கள், மர்தன = கொல்பவன் / அழிப்பவன். சமுத்திரத்தில் இருந்துகொண்டு அவ்வப்போது வெளியில் வந்து, தேவதை களுக்கு தொந்தரவு கொடுத்து வந்த மதுகைடப, ஹயக்ரீவ அசுரன் ஆகிய தைத்யர்களை கொன்றதால், ஸ்ரீஹரிக்கு

ஜனார்த்தனன் என்று பெயர். துஷ்டர்களைக் கொன்று, சஜ்ஜனர்களை காப்பதாலும் ஜனார்த்தனன் என்று பெயர் வந்திருக்கிறது.

**இந்திரானுஜனாகி ஸ்வர்க்க$^{3}$தொ$^{3}$ளிருதித்$^{1}$து$^{3}$**
**ஸாந்த்ரசுக$^{2}$வீவெ சுரரிகெ கோலெ**
**ஸாந்த்ரசுக$^{2}$வித்து சுரர பாலிஸுவ உ**
**பேந்த்ரன்ன மொதலெ ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||26**

இந்திரனின் தம்பியாக வந்ததால், வாமனரூபி ஸ்ரீஹரிக்கு உபேந்திரன் என்று பெயர். செல்வங்களினால் வரும் சுகத்தை இந்திராதி தேவதைகளுக்குக் கொடுக்கும், ஸ்வர்க்கத்திலேயே இந்திரனுடன் வசிக்கும் உபேந்திரனை இங்கு வணங்குகிறார் தாசர்.

**பரமப$^{4}$க்தர பாப பரிஹாரவனெ மாடி**
**பரமபதவிய பாலிப கோலெ**
**பரமபதவிய பாலிப நம்ம ஸ்ரீ**
**ஹரியன்னெ மொதலெ ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||27**

பக்தர்களின் பாவத்தை போக்குகிறான். அந்த பாவங்களினால் கிடைக்கும் பலன்களை அவர்களுக்குக் கிடைக்காதவாறு செய்கிறான். ஆகையால் ‘ஹரி’ பரமாத்மனின், பாவங்களை பரிகரிக்கும் அற்புத செயலின் காரணப்பெயராக இருக்கிறது. ஸ்ரீஹரி, பாப பரிகாரகனாக இருந்தாலும், பக்தர்களின் பாவங்களை மட்டும் பரிகரிப்பவனாக இருக்கிறானே தவிர, பக்தர்கள் அல்லாதவர்களின் அல்லது துஷ்டர்களின் பாவங்களை பரிகரிப்பதில்லை.

**சிஷ்டபாலக உத்க்ருஷ்ட ஞானானந்த**
**க்ருஷ்ணெய கஷ்ட பிடிஸித கோலெ**
**க்ருஷ்ணெய கஷ்ட பிடிஸித நம்ம ஸ்ரீ**
**க்ருஷ்ணன்ன மொதலெ ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||28**

அனைத்து உலகங்களையும் தன்னில் வைத்திருந்து, பாதுகாப்பதால் பரமாத்மனுக்கு ‘கிருஷ்ண’ என்று பெயர். க்ருஷி என்னும் சொல் ’பூ’க்கு (பூமி) சம்பந்தப்பட்டது. ’பூர்ணத்வாத் பூ:’- பூர்ணமாகையால் ஸ்ரீஹரி, ‘பூ’ என்று அழைக்கப்படுகிறார். ’ணஸ்ச நிர்வ்ருதிவாசக:’ ‘ண’ என்றால் ஆனந்தம் / மகிழ்ச்சி என்று பொருள். ஆகையால், ‘கிருஷ்ண’ என்றால் பூர்ணானந்த ஸ்வரூபன். ’கிருஷ்ணரூபத்வாத்’ நீல வண்ணத்தில் ஒளிரும் தேகம் உள்ளவனாகையால் ‘கிருஷ்ண’ எனப்படுகிறார். இப்படியே, கிருஷ்ண என்னும் பெயருக்கு பல மகிமைகள் / காரணங்கள் உள்ளன.

இந்த நுடி வரைக்கும், கேசவாதி 24 நாமங்களால் அழைக்கப்படும் ஸ்ரீஹரியின் மகிமைகளை தாசர் நிரூபிக்கிறார். இந்த 24 நாமங்கள், விஷ்ணுவின் 1,000 நாமங்களில் அடங்கி யிருக்கின்றன. விஷ்ணு சஹஸ்ரநாமத்தில் இருக்கும் ஒவ்வொரு பெயருக்கும் 100 அர்த்தங்கள் உள்ளன என்று ஸ்ரீமதாசார்யர், பண்டிதர்கள் நிறைந்த சபையில் நிரூபித்துக் காட்டினார் என்று மத்வவிஜயத்தில் பார்க்கிறோம்.

ஆகையால், கேசவாதி 24 நாமங்களுக்கும், ஒவ்வொன்றிற்கும் 100 அர்த்தங்கள் (அதாவது அந்தப் பெயரால் அழைக்கப்படும் ஸ்ரீஹரியின் மகிமைகள்) உள்ளன என்று அறியலாம். ஆனால், இந்தக் கிருதியில் தாசார்யர், ஒவ்வொரு பெயரிலும் உள்ள நூறு அர்த்தங்களில் முக்கியமான ஒன்றை மட்டும் விளக்கி, நாமஸ்மரணையின் காலத்தில் அந்த முக்கிய மகிமையின் சிந்தனை நமக்கு வரட்டும் என்று நினைத்திருக்கிறார். மகிமா ஞானத்துடனான சங்கீர்த்தனையே நமக்கு நற்பலன்களைக் கொடுக்கக்கூடியதாகும்.

**அனிருத்தாதி ரூப விஷ்வாதி அஜிதாதி**
**சனத்குமாராதி அஜாதி கோலெ**
**சனத்குமாராதி அஜாதி ரூபனாத**
**க⁴னமஹிமன்ன ப³லகொ³ம்பெ³ கோலெ ||29**

பரமாத்மனே சததமேக ரூபிணே தசரூபிணே ஷதசஹஸ்ர ரூபிணே |
அவிகாரிணே ஸ்புடமனந்த ரூபிணே சுகசித் சமஸ்ததனவே நமோ நம: || (சுமத்வவிஜயம்)

பல வியூகங்களுடன் வீற்றிருக்கும் பரமாத்மனை நினைப்பதற்கு, மேற்கண்ட ஸ்லோகத்தில் துவங்கி, அடுத்தடுத்த ஸ்லோகங்களில் ஸ்ரீஹரியின் மகிமைகளை விளக்குகிறார் தாசார்யர். ஸ்வகதபேத விவர்ஜிதனான மூலரூபி ஸ்ரீநாராயணன், மத்ஸ்யாதி பத்து ரூபங்களைக் கொண்டவன், நாராயணாதி 100 ரூபங்களைக் கொண்டவன், விஸ்வாதி 1000 ரூபங்களைக் கொண்டவன் என்றும், இந்த அனைத்து ரூபங்களும் மற்றும் பல இதர ரூபங்களும், தோஷங்கள் இல்லாமல், சுக ஞானாதி ஸ்வரூபங்களே ஆகியிருக்கின்றன என்று தினமும் நினைக்க வேண்டும். (இத்தகைய மகிமைகளைக் கொண்ட பரமாத்மனை சிந்தனை செய்கிறேன் என்பதே மேலே கொடுத்துள்ள சுமத்வவிஜய ஸ்லோகத்தின் பொருளாகும்).

அனிருத்தாதிரூப = அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் நான்கு ரூபங்களைக் கொண்ட ஹே ஸ்வாமி, ‘ஓம் நமோ நாராயணாய’ என்னும் அஷ்டாக்ஷர மந்திரமானது, ‘ஓம்’ முதலான 8 எழுத்துக்களால் ஆனது. இந்த 8 எழுத்துக்களில், முதல் நான்கான, அ,உ,ம மற்றும் நாதங்களில் முறையே பூ: புவ: ஸ்வ: பூர்புவஸ்வ: எனும் நான்கு வியாஹ்ருதிகளும் அடங்கியிருக்கின்றன. இந்த நான்கு வியாஹ்ருதிகளால் அனிருத்தாதி நான்கு அல்லது பின்னோக்கி வாசுதேவாதி நான்கு பகவத்ரூபங்கள் வெளிப்படுகின்றன.
விஸ்வாதி = விஸ்வ, தைஜஸ, ப்ராக்ஞ, துரிய, ஆத்ம, அந்தராத்ம, பரமாத்ம, ஞானாத்ம என்னும் எட்டு ரூபங்கள், பிரணவத்தின் எட்டு எழுத்துக்களால் போற்றப்படுகின்றன. விஸ்வாதி என்பது ‘விஸ்வம் விஷ்ணு:’வில் துவங்கும் 1000 பெயர்களையும் குறிக்கின்றன என்று அறிந்து கொள்ளலாம்.

அஜிதாதி = அஜிதன் முதலான அனந்த ரூபங்களின் சமூக மானது, பிரம்மன் முதலான தேவதைகளால் வணங்கப்படும் ரூபங்கள் ஆகும். அப்படியே மத்ஸ்ய, கூர்ம, ராமகிருஷ்ணாதி தசாவதாரங்களில் சேராத, சனத்குமாராதி பல ஆவேச அவதாரங்களையும் ஸ்ரீஹரி எடுத்திருக்கிறார் என்று அறிய வேண்டும்.

பிரம்மண்யனந்தே கருடே ருத்ரே காமே ஷசீபதௌ |
அனிருத்தே மனௌ சைவ ப்ருதௌ ச க்ருதவீர்யஜே |
நாரதே சைவமாத்யேஷு விசேஷாத்ஸன்னிதிர்ஹரே: |
சுதர்ஷனாதிஷ்வஸ்த்ரேஷு ததா சன்னிஹிதோ ஹரி: ||
(பாகவத தாத்பர்ய)

ப்ருது ராஜனிடம், சாக்ஷாத் பரமாத்மன், விசேஷ ரூபத்தினால் (ராஜராஜேஷ்வர ரூபத்தினால்) அவதரித்தார். அப்படியே, சதுர்முகன், சேஷ, கருட, ருத்ர, மன்மத, தேவேந்திர, அனிருத்த, ஸ்வாயம்புவ, கார்த்தவீர்யார்ஜுனன், நாரதர் ஆகியோரிடமும் ஸ்ரீஹரியின் விசேஷ சன்னிதானம் இருக்கிறது (ஆவேச). சனத்குமாரன், மன்மதனின் அவதாரம். அதனாலேயே, அவர் ஸ்ரீஹரியின் ஆவேசாவதாரம் இருக்கிறது என்று அறிகிறோம்.

'வைன்யே ப்ருதௌ சன்னிஹிதோ ராஜரூபீ ஜனார்த்தன:' மற்றும் 'ப்ரத்யும்னஸ்ச குமாரஸ்ச ஸ்கந்த:காமாம்ஷஜா ஸ்ம்ருதா:' ஆகிய ஸ்லோகங்கள் இதற்கு ஆதாரமாக விளங்குகின்றன.

**ஹயக்ரீவ தத்த ருஷப சங்கர்ஷண**
**ப⁴யரஹித பா³த³ராயண கோலெ**
**ப⁴யரஹித பா³த³ராயண மஹிதாஸ**
**வைகுண்ட ஹரிய ப³லகொ³ம்பெ³ கோலெ ||30**

பரமாத்மனின் சாக்ஷாத் அம்சாவதாரகளான பல சிறப்புமிக்க பகவத்ரூபங்களின் உபாசனையை இங்கு குறிப்பிடுகிறார் தாசர். பயரஹித = என்றைக்கும் சம்சார பயமில்லாத, ப்ராக்ருத

தேகத்தையே பெறாத, எவ்வித தோஷங்களும் அற்ற, நித்ய முக்த ஸ்வரூபனான, பாதராயண = ஶ்ரீவேதவியாசர், மஹிதாச மற்றும் ஐதரா தேவியின் மகனாகப் பிறந்தார். ஶ்ரீநாராயணன், ரிஷப நாமகனாக, ஶ்ரீஹரி நாபிராஜனின் மகனாக அவதரித்து தனது நூறு மக்களின் நலனுக்காக, சர்வமகிரிஷி சபையில் தத்வோபதேசம் செய்தார். ஹயக்ரீவ, தத்தாத்ரேய (அத்ரி ரிஷியின் மகனாக அவதரித்த தத்த நாமக ஶ்ரீஹரி), வேத வியாசாதி மந்திரங்களை உபாசனை செய்தால், மிகச் சிறந்த பலன்கள் கிடைக்கும் என்று தந்த்ரசாரத்தில், அந்தந்த ரூபங்களின் உபாசனா மந்திரங்கள், அதன் பிரதிபாத்ய ரூபங்கள், அந்த பகவத்ருபங்களின் மகாமகிமைகள், ஆகியவற்றை நிரூபித்திருக்கிறார் ஶ்ரீமதாசார்யர். மேலும் விவரங்களுக்கு அந்த கிரந்தத்தைப் பார்க்கவும்.

**ஆத்மாதி வாசுதேவாதி மூருதி**
**ஶ்ரீத[1]ருணீஷ விஷ்வேஷ கோலெ**
**ஶ்ரீத[1]ருணீஷ விஷ்வேஷ ரூபனாத**
**ஜ்யோதிர்மயன ப[3]லகொ[3]ம்பெ[3] கோலெ ||31**

ஶ்ரீதருணீஷ = ஶ்ரீமகாலட்சுமிதேவியின் தலைவன். விஷ்வேஷ = உலகத்திற்கே தலைவன். ஜ்யோதிர்மய = பிரகாசமானவன். ஆத்மாதி வாசுதேவாதி மூருதி = ஆத்ம, அந்தராத்ம, பரமாத்ம, ஞானாத்ம என்னும் பகவத்ரூபங்கள் மற்றும் வாசுதேவ, சங்கர்ஷண, ப்ரத்யும்ன, அனிருத்த என்னும் பகவத்ரூபங்கள். பிரணவத்தின் பிந்து, கோஷ, ஷாந்த மற்றும் அதிஷாந்த என்னும் 8 எழுத்துக்களால் பிரதிபாத்யனான ஆத்மாதி ரூபங்கள். பிரணவத்தின் அ-உ-ம-நாத என்னும் 4 எழுத்துக் களால் அபிவ்யக்தமான பூ:, புவ:, ஸ்வ:, பூர்புவஸ்வ: என்னும் நான்கு வியாஹ்ருதிகள், இவற்றிலிருந்து பிறந்தவை வாசுதேவாதி ரூபங்கள். இந்த அனைத்து ரூபங்களும், லட்சுமி தேவியுடன், பிரகாசமானவையே. கலசத்தில் ஆவாஹனம் செய்து வணங்கப்பட வேண்டிய பகவத்ரூபங்கள் என்று இந்த ஸ்லோகத்தில் தொகுத்திருக்கிறார் தாசர்.

அகராதி 51 எழுத்துக்களில் வியாபித்திருக்கும் அஜாதி 51 ரூபங்கள், வாசுதேவாதி 4 ரூபங்கள், விஷ்வ, தைஜசாதி 4 ரூபங்கள், மத்ஸ்யாதி 10, வேதவியாஸ, தத்தாத்ரேய, சிம்சுமார ஆகிய 3, கேசவாதி 24, ஆத்மாதி 4 என்று மொத்தம் 100 பகவத் ரூபங்களை கலசத்தில் ஆவாகனம் செய்து அவற்றை தியானிக்க வேண்டும் என்று சொல்லி, 'ஏதாபி:ஸஹிதாம் மூல மூர்த்திம் கும்போதகே சுதீ:'. இந்த 100 மூர்த்திகளுடன், புத வருணர்களின் மூலரூபியான ஸ்ரீலட்சுமி நாராயணனை ஆவாகனம் செய்யவேண்டும் என்று சொல்கிறார்.

**முனி வேதவ்யாஸ சனத்குமாரமூர்த்தி**
**மினுகு³வ தத்தாத்ரேயன கோலெ**
**மினுகு³வ தத்தாத்ரேய ஹயக்ரீவ**
**த³னுஜாந்தகன்ன ப³லகொ³ம்பெ³ கோலெ ||32**

வேதவியாச மற்றும் சனத்குமார அவதாரங்களால் விசேஷ மான ஞான காரியங்கள் நடந்திருக்கின்றன. சனத்குமார நாமக பகவத்ரூபத்தின் ஆவேசம், பிரம்மபுத்ரனான சனத்குமாரனிடம் இருக்கிறது.

100 கோடி சந்திரரின் ஒளியைவிட ஒளி பொருந்தியவரும், அகராதி வர்ணாபிமானிகளான, பிரம்மாதி தேவதைகளைவிட சிறந்தவரான, அவர்களுக்கு அனைத்து வித்யைகளையும் எப்போதும் உபதேசித்திருப்பவரான, ஸ்ரீவேதவியாசரை தியானிக்க வேண்டும் என்றும்,

உதயசூரியனைப் போல செந்நிறமுள்ள தேகத்தை உடையவரும், எண்ணிக்கையற்ற சூரியரைவிட அதிக ஒளி பொருந்திய, அனைத்து உலகங்களிலும் வியாபித்திருக்கும், ஸ்ரீஹரியின் கபில தத்தாத்ரேய ரூபங்களை தியானிக்க வேண்டும் என்றும்,

சந்திரபிம்பத்தில் இருப்பவரும், சந்திரனைப் போல வெண்மை யானவரும், தனது அமிர்த கிரணங்களால் அனைத்து

உலகங்களிலும், அனைத்து இடங்களிலும் வியாபித்து ஒளியைப் பரப்புபவருமான ஸ்ரீஹயக்ரீவரை தியானிக்க வேண்டும் என்றும், ஹயக்ரீவ மந்திர ஜபத்தை விளக்கியவாறு தந்த்ரசார கிரந்தம் சொல்கிறது.

**க$^{1}$ங்க$^{3}$ளபாங்க$^{3}$தி$^{3}$ம் கமலாசனாதிகள**
**ஸங்கா$^{3}$த$^{1}$ ஸ்ருஷ்டிப மஹாலக்ஷ்மி கோலெ**
**ஸங்கா$^{3}$த$^{1}$ ஸ்ருஷ்டிப மஹாலக்ஷ்மி நின்ன பா**
**தங்களிகெரகி ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||33**

பூவராக மந்திரம், நரசிம்ம மந்திரம், ஹம்ஸ மந்திரம், ததிவாமன மந்திரம், வாமன, பரசுராம, தாசரதிராம, கிருஷ்ண, வேதவியாச மந்திரங்கள், ஹயக்ரீவ, கபில, தத்தாத்ரேய ஆகிய வேதோக்த மந்திரங்களைக் கூறி, பிறகு, ஸ்ரீமகாலட்சுமி, சதுர்முக, முக்ய பிராணாதி மந்திரங்களை - தனது தந்திரசார சங்க்ரஹ கிரந்தத்தில் ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருக்கிறார்.

ஸ்ரீமோகனதாசரும் அதே கிரமத்தைப் பின்பற்றி, இந்த நுடி யிலிருந்து ஸ்ரீமகாலட்சுமியை அவரது மகிமாபூர்வகமாக எப்படி சிந்திப்பது என்பதை விளக்குகிறார்.

விஸ்வஸ்திதி பிரளய சர்க்க மஹாவிபூதி
வ்ருத்திபிரகாஷ நியமாவ்ருதி பந்த மோக்ஷா: |
யஸ்யா அபாங்க லவமாத்ரத ஊர்ஜிதாஸா
ஸ்ரீயத் கடாக்ஷ பலவத்யஜிதம் நமாமி ||
(த்வாதச ஸ்தோத்திரம்)

இந்த உலகத்தின் படைத்தல், அழித்தல், காத்தல் முதலிய வேலைகளை, ஸ்ரீமகாலட்சுமி தனது கடைக்கண் பார்வை யினாலேயே செய்து முடிக்கிறாள். 'யம் காமயே தம் தமுக்ரம் க்ருணோமி தம் பிரம்மாணம் தம்ருஷிம் தம் சுமேதாம்' (வேத மந்திரம்). பிரம்மருத்ராதிகளுக்கு அவரவரின் அதிகார ஸ்தானங்களை, தனது இஷ்டத்திற்கேற்ப கொடுக்கத் தகுதி யானவள் மகாலட்சுமி என்று சொல்கிறது.

பிரம்ம, வாயு, கருட, சேஷ, ருத்ர, இந்திர, சூர்ய, சந்திர ஆகிய பதவிகளில் தற்போது இருக்கும் / முன்னர் இருந்த / இனி வரப்போகிற அனைத்து தேவதைகளும், தமது பதவிகளை, சக்திகளை, பல்வேறு அம்சங்களால் பல ஜீவர்களில் நின்று வியாபித்திருக்கும் சக்தியை, பிரக்ருதி முதலான தத்வங்களின் அபிமானி தேவதையான, ஞான பக்தி முதலான குணங்களைக் கொடுப்பவளும், முக்தியையும், முக்தியில் நித்ய சுகா னுபவத்தையும், ஸ்ரீமகாலட்சுமி மிகச் சுலபமாக செய்து முடிக்கிறார் என்று சொல்லியிருக்கிறார்கள்.

**ஸ்ரீமாயா ஜயா க்ருதி ஷாந்தி இந்திராதேவி**
**காமன ஜனனி ஜயந்தி கோலெ**
**காமன ஜனனி ஜயந்தி ஜானகி சத்ய**
**பாம ருக்மிணிய ப³லகொ³ம்பெ³ கோலெ ||34**

பிரளய காலம் முடிந்து, ஸ்ருஷ்டி காலம் தொடங்குகையில், மூலரூபி ஸ்ரீநாராயணன், உலகத்தின் படைப்பினை நிர்வகிப் பதற்காக (மூலரூபத்திலிருந்தே இந்த வேலைகளை செய்ய முடியும் வல்லமை படைத்தவன் ஆனாலும்), வாசுதேவ, சங்கர்ஷண, பிரத்யும்ன மற்றும் அனிருத்த என்னும் நான்கு ரூபங்களை அதே வரிசையில் வெளிப்படுத்தினார். இதை 'ஈஷ ஸ்ருஷ்டி' என்றும் சொல்லலாம். இந்த வாசுதேவாதி ரூபங்களுக்கு சேவை செய்வதற்காக, ஸ்ரீமகாலட்சுமிதேவி முறையே, மாயா, ஜயா, க்ருதி, ஷாந்தி என்னும் ரூபங்களை எடுத்தார்.

இந்த லட்சுமி ரூபங்கள் அனைத்தும் சச்சிதானந்த ரூபங்கள் ஆகும். அவருக்கு எப்போதும் ப்ராக்ருத தேகம் (அழியும் தேகம்) கிடைப்பதில்லை. இந்த மாயாதி ரூபங்களைக் கொண்டவளின் பெயர் இந்திராதேவி (மகாலட்சுமி தேவி). அவரே மன்மதனை மகனாகப் பெற்றார்.

சத்யபாமா - சத்யஜித யாதவனின் மகள். லட்சுமிதேவியின் அவதாரம். ஶ்ரீகிருஷ்ணனின் மேல் ஸ்யமந்தக மணியின் விஷயத்தில் த்வேஷத்தைக் கொண்டிருந்த காரணத்தால் ஏற்பட்ட களங்கத்தைத் துடைக்க, சத்ராஜிதன், அவருக்கு சத்ய பாமாவைக் கொடுத்து திருமணம் செய்து, ஶ்ரீகிருஷ்ணனின் மாமனார் ஆனார்.

ருக்மிணி- பீஷ்மகராஜனின் மகள். லட்சுமிதேவியின் அவதாரம். ருக்மிணிதேவியை சிசுபாலனுக்குக் கொடுத்து திருமணம் செய்யவேண்டும் என்று நினைத்தபோது, அனைவரும் பார்த்திருந்தபோதே, அவளை அபகரித்துப் போய், ஶ்ரீகிருஷ்ணன், அவளின் விருப்பப்படியே திருமணம் புரிந்து கொண்டார்.

**ஹதினால்கு லோகவ முததிந்த ஸ்ருஜிசுவ**
**பதுமசம்பவனெ பரமேஷ்டி கோலெ**
**பதுமசம்பவனெ பரமேஷ்டி நின்ன பத**
**பதுமன முன்ன ப³லகொ³ம்பெ³ கோலெ ||35**

ஹதினால்கு லோகவ முததிந்த ஸ்ருஜிசுவ = ஶ்ரீஹரி, பிரம்மாண்டத்தைப் படைத்த பிறகு, அதற்குள் படைக்கப்பட்ட பிரம்மதேவன், பிரம்மாண்டத்தின் பகுதிகளான 14 லோகங்களையும் படைத்து, பகவத் ஆணையை மிகவும் மகிழ்ச்சியுடன் செய்து முடித்தான். பதுமசம்பவ = ஶ்ரீஹரியின் நாபி கமலத்திலிருந்து பிறந்த பிரம்மதேவன். பரமேஷ்டி = சத்ய லோகத்திலிருக்கும் சதுர்முக பிரம்மன்.

இந்த நுடியிலிருந்து தொடங்கி, தாரதம்யத்திற்கேற்ப சரஸ்வதி, பாரதி, கருட, சேஷ ருத்ராதிகளை சிந்திக்க வேண்டிய முறையை விளக்குகிறார் தாசர்.

**ஹனும பீம மத்வமுனிராய மாருத**
**தனுஜாரி ப⁴க்த விரக்த கோலெ**
**தனுஜாரி ப⁴க்த விரக்த நின்ன பத**
**வனஜவ முன்ன ப³லகொ³ம்பெ³ கோலெ ||36**

மாருத = ஹே வாயுதேவா ! வேதத்தில் புகழப்படும் ஹனும, பீம, மத்வ என்று மூன்று அவதாரங்கள் உள்ளவன், ஸ்ரீவாயு தேவன். பல, ஞானாதி குணங்களால் இந்த மூன்று ரூபங்களும், மூலரூபத்திற்கு இணையானவையே. தனுஜாரிபக்த = அசுரர்களின் பகைவனான ஸ்ரீஹரி பக்தன். விரக்த - விரக்த சிகாமணி (ஸ்ரீராமனுக்கு ஆஞ்சனேயரைவிட ப்ரியமானவர்) வேறு யாருமில்லை). ராமராஜ்ஜியத்தில் கிடைக்காதது என்று எதுவும் இல்லை. எந்தவிதமான சுகத்தைக் கொடுக்கும் பொருட்களையும் ஆஞ்சனேயர் விரும்பவில்லை. பதவனஜவ = பாத கமலங்களை.

**வாணி அஜன முத்துராணி பல்லவபாணி**
**ஜாணெ கொடெமகெ மதிகள கோலெ**
**ஜாணெ கொடெமகெ மதிகள நின்ன பத**
**ரேணுவின முன்ன ப$^3$லகொா$^3$ம்பெ$^3$ கோலெ ||37**

வாணி = சரஸ்வதிதேவி. அஜன முத்து ராணி = பிரம்மனுக்கு ப்ரியமானவள். பல்லவபாணி = மிருதுவான கரங்களைக் கொண்டவள். ஜாணெ = முழுமையான ஞானத்தைக் கொண்டவள். மதிகள = (நமது தகுதிக்கேற்ப) அறிவினை. பாத ரேணுவின = பாததூளியை. பலகொம்பெ = வணங்குகிறேன்.

**பா$^4$ரதிதேவி நின்ன வாரிஜசரணவ**
**பா$^3$ரிபா$^3$ரிகெ ப$^4$ஜிஸுவெ கோலெ**
**பா$^3$ரிபா$^3$ரிகெ ப$^4$ஜிஸுவெ எமகெ ஸ்ரீ**
**நாராயணனல்லி ரதி$^1$கொடு கோலெ ||38**

ஸ்ரீவாயுதேவரின் மனைவியான ஸ்ரீபாரதிதேவி, சரஸ்வதிக்கு சமமானவள். பக்திக்கு அபிமானினி. குருபக்தி, ஹரிபக்தியை தகுந்தவர்களுக்குக் கொடுக்கும் அதிகாரம் படைத்தவள். இப்படி இவர்கள் இருவரும் ஞானபக்திகளை அருளும் ருஜுகணத்தின் அதிகார தேவதைகள்.

**இந்த்ரன கெத்து3 ஸுதெ4 தந்து மாதெ1ய**
**பந்த4ன கடி3த3 பலுதீ4ர கோலெ**
**பந்த4ன கடி3த3 பலுதீ4ரனாத3 க2**
**கே3ந்த்ரன்ன முன்ன ப3லகொ3ம்பெ3 கோலெ ||39**

ககேந்த்ர = பட்சிராஜன் (கருடன்). முன்ன = முதலில் (கருடனைவிட கீழ் இருக்கும் தேவதைகளை வணங்குவதற்கு முன்னர்). இந்த்ரன கெத்து ஸுதெ தந்து மாதெய பந்தன கடித= கஷ்யப ரிஷிகளுக்கு இரு மனைவிகள். வினதெ மற்றும் கத்ரு. வினதெயின் மகனே கருடன். வினதெ மற்றும் கத்ருவிற்கு நடுவே நடந்த போட்டியில், கத்ருவின் சூழ்ச்சியால் தோற்ற வினதெ, தனது மக்களுடன் கத்ருவின் அடிமையானாள்.

கருடன் முதலானவர்கள் வினதெயின் மக்கள் தக்ஷகன் முதலானவர்கள் கத்ருவின் மக்கள்.. தேவலோகத்திலிருந்து அமிர்தத்தைக் கொண்டு வந்து கொடுத்தால், வினதையை தாஸ்யத்திலிருந்து விடுவிப்பதாக கத்ரு கூறினாள். உடன், கருடன் தேவலோகத்திற்குச் சென்று, அமிர்தத்தைக் காப்பவர்கள் அனைவரையும் போரில் வென்று, அமிர்த கலசத்துடன் திரும்பினான். அதைக் கண்ட இந்திரன், தனது வஜ்ராயுதத்தை கருடன் மேல் எறிந்தான்.

இந்திராயுதத்திற்கு மரியாதை கொடுப்பதற்காக, தனது ஒரு சிறகை ஆஹுதியாகக் கொடுத்து, தனது மகிமையால் இந்திர னால் பூஜிக்கப்பட்டு, சர்ப்பங்களே தனது ஆகாரங்களாக வேண் டும் என்று வரத்தைப் பெற்றான். அந்த அமிர்த கலசத்தை கத்ருவிடம் கொடுத்து, தன் தாயை மற்றும் அனைவரையும் தாஸ்யத்திலிருந்து விடுவித்தான். பலுதீர = மிகச்சிறந்த வீரன்.

**ஸாஸிர முக2திந்த ஸ்ரீஷன்ன துதி1ஸி ஸ்ரீ**
**வாசுதேவங்கெ ஹாஸிகெ3 கோலெ**
**வாசுதேவங்கெ ஹாஸிகெ3யாத மஹா**
**சேஷன்ன முன்ன ப3லகொ3ம்பெ3 கோலெ ||40**

சரஸ்வதி, பாரதி தேவியருக்கு அடுத்த கக்ஷையில் (வகுப்பில்) இருப்பவர் சேஷதேவர். ஆயிரம் முகங்களைக் கொண்டவர். அந்த 1000 முகங்களால் நிரந்தரமாக ஸ்ரீஹரியை துதித்தாலும், ஸ்ரீஹரியின் அனந்தானந்த குணங்களை முழுமையாக அவரால் சொல்ல முடியவில்லை. ஸ்ரீஹரியின் படுக்கையாக இருந்து அவரை வணங்குகிறார். முக்தியில்கூட முக்தசேஷன், ஸ்ரீஹரியை வணங்குகிறார். புஷ்கரனிலிருந்து துவங்கும் தத்வாபிமானி தேவதைகள் அனைவரும் மகாமகிமை பொருந்தியவர்கள். சேஷ கருடாதி தேவதைகள், சர்வ தத்வங் களுக்கும் அபிமானிகள். இந்திராதிகளைவிட அதிக மகிமைகளைக் கொண்டவர்கள்.

**அபரிமிதகார்ய த்ரிபுரதஹனனெ**
**சப$^{1}$லமூருதி சந்த்ரசூட கோலெ**
**சப$^{1}$லமூருதி சந்த்ரசூட ப$^{4}$ஜக$^{1}$ர**
**அபம்ருத்யுஹரன ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||41**

அபரிமிதகார்ய = மனோபிமானியான சிவன், அனைத்து ஜீவர் களின் மனங்களுக்கு அபிமானியாக இருக்கிறவர். த்ரிபுரதஹன = மயனால் நிர்மாணிக்கப்பட்ட பூமி, அந்தரிக்ஷ மற்றும் ஆகாயம் ஆகியவற்றில், முறையே இரும்பு, வெள்ளி, தங்கம் ஆகியவற்றாலான மூன்று நகரங்களில் வசித்து வந்த தாரகா சுரனின் மக்களான தாராக்ஷ, கமலாக்ஷ மற்றும் வித்யுன்மாலி ஆகியோர், யாராலும் வெல்லப்பட முடியாதவர்கள் ஆகையால், தேவதைகளை பலவிதமாக துன்புறுத்தி வந்தனர். பிரம்மன் சாரதியாக இருந்த ரதத்தில், சிவன் ஏறி, விஷ்ணுவையே பாணமாகக் கொண்டு, ஒரே பாணத்தினால் அவர்களைக் கொன்று, அந்த மூன்று நகரங்களையும் அழித்தான்.

சபலமூர்த்தி = வேகமாக பயணிக்கக்கூடியவன். சந்திரசூட = தலையில் சந்திரனை தரித்தவன். அபம்ருத்யுஹர = துர் மரணங்களை பரிகரிப்பவன்.

**ஜாம்பவத்யாதி ஸ்ரீஹரிய ராணியரிகெ**
**ஸம்ப்4ரமதிந்த ஷரணெம்பெ கோலெ**
**ஸம்ப்4ரமதிந்த ஷரணெம்பெ க2க3சேஷ**
**ஷம்புராணியர ப3லகொா3ம்பெ3 கோலெ ||42**

கிருஷ்ணாவதாரத்தில், ஸ்ரீஹரிக்கு மனைவியாக இருந்தவர்களில், சாக்ஷாத் லட்சுமிதேவியின் அவதாரர்களான ருக்மிணி, சத்யபாமையைத் தவிர, ஜாம்பவதி, நீலா, பத்ரா, மித்ரவிந்தா, காளிந்தி, லட்சணா என்னும் ஆறு பேரும் லட்சுமியின் அவதாரர்களாக, தாரதம்யத்தில் கருட சேஷ ருத்ரர்களுக்குக் கீழும், அவர்களது மனைவியர்களான சௌபர்ணி, வாருணி, பார்வதிதேவி ஆகியோரின் மேலும் இருக்கின்றனர்.

கக= கருடன். சேஷ = சேஷதேவர். ஷம்பு = ருத்ரர். இவர்களின் மனைவியரே முன்னர் சொன்ன சௌபர்ணி முதலானவர்கள்.

**ஷக்ரகா1மாதி தேவர்கள சரணக்கெ**
**அக்கரதிந்த அபி4னமிபெ கோலெ**
**அக்கரதிந்த அபி4னமிபெ பே1ள்வெ தே**
**வக்கி நந்தன சரிதெய கோலெ ||43**

ஷக்ரகாமாதி தேவர்கள = இந்திரன், காமன் முதலான தேவதைகளின். அக்கரதிந்த = பக்தியுடன் (அன்புடன்). தேவக்கி நந்தனன = தேவகியின் மகனாக அவதரித்த ஸ்ரீகிருஷ்ணனின். சரிதெய அபினமிபெ பேள்வே = ஸ்ரீகிருஷ்ணனின் சரிதையைத் தொகுத்து, குருபரம்பரையை வணங்கி, போற்றி சொல்வேன். (அடுத்த 48வது நுடியிலிருந்து இதை சொல்கிறார் தாசர்).

**ஸ்ரீமத்வமுனி பத்பனாப நரஹரிதீர்த்த**
**ஸ்ரீமாதவார்ய அக்ஷோப்ய கோலெ**
**ஸ்ரீமாதவார்ய அக்ஷோப்ய ஜயதீர்த்த**
**ஸ்வாமிகள மொதலெ ப3லகொா3ம்பெ3 கோலெ ||44**

ஸ்ரீமத்வாசார்யர். அவரது நேரடி சிஷ்யரான பத்பனாப தீர்த்தர், நரஹரி தீர்த்தர், மாதவ தீர்த்தர் மற்றும் அக்ஷோப்ய தீர்த்தர். அக்ஷோப்ய தீர்த்தரின் சிஷ்யரான ஸ்ரீஜயதீர்த்தர் (டீகாராயர்). ஸ்ரீகிருஷ்னனின் சரிதையை சொல்வதற்கு முன்னர், இவர்களை வணங்கி, போற்றி, அடிபணிகிறேன் என்று கூறுகிறார் தாசர். குருவை வணங்கியபின் செய்யும் ஸ்ரீஹரி ஸ்துதியே தக்க பலனைத் தரும். குருபக்தி இல்லாத ஹரிபக்தி வீணாகும்.

**நியாயாம்ருத தர்க்கதாண்டவ சந்த்ரிகா**
**நியாயக்ரந்த$^{2}$கள ரசிஸித கோலெ**
**நியாயக்ரந்த$^{2}$கள ரசிஸித நம்ம வ்யாஸ**
**ராயர முன்ன ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||45**

நியாயாம்ருத, தர்க்கதாண்டவ மற்றும் சந்திரிகா ஆகியவை மிகச்சிறந்த நியாய கிரந்தங்கள். இவற்றை இயற்றி, ஞானி களுக்கும் பேருதவியைச் செய்தவர் ஸ்ரீவியாசராய முனிகள் (வேதாந்த ரகசியங்களைக் கூறி, தத்வஞான விஷயங்களை அனைவருக்கும் எட்டுவதற்கு உதவும் இந்த கிரந்தங்களை இயற்றிய ஸ்ரீவியாசராயர், ஸ்ரீபிரகலாத ராஜரின் அவதாரம் என்று சொல்லப்படுபவர்).

**ஜனனி கர்ப்ப$^{4}$திந்தவனி ஸ்பர்ஷவாகதெ**
**ஜனிஸி பிரம்மண்யமுனிகள கோலெ**
**ஜனிஸி பிரம்மண்யமுனிகள ம்ருதுஹஸ்த**
**வனஜசம்ப$^{4}$வன ப$^{3}$லகொ$^{3}$ம்பெ$^{3}$ கோலெ ||46**

பிறந்ததும், பூமியின் ஸ்பரிசம் ஆகாமல் தங்கத் தட்டில் மடத் திற்குக் கொண்டு வரவேண்டும் என்ற ஸ்ரீபிரம்மண்ய தீர்த்தரின் ஆணையின்படி, ஸ்ரீவியாசராயரை மடத்திற்குக் கொடுத்ததை இங்கு தெரிவிக்கிறார். அடுத்த பிரம்மண்ய தீர்த்தர் தமது பொற்கரங்களால் ஸ்ரீவியாசராயரை எடுத்து வளர்த்தார். ஸ்ரீவியாசராயரின் பிறப்பினை இந்த நுடி தெரிவிக்கிறது.

**ஸ்ரீபாதராயரலி சகலவித்4யவனோதி**
**ஸ்ரீபதி ப்ரீதிபடிஸித கோலெ**
**ஸ்ரீபதி ப்ரீதிபடிஸித வ்யாஸமுனி**
**பூ4பன மொதலெ ப3லகொ3ம்பெ3 கோலெ ||47**

ஸ்ரீவியாசராயரின் வித்யா குரு - ஸ்ரீஸ்ரீபாதராயர். ஸ்ரீலட்சுமி பதியை மகிழ்வித்தவர் ஸ்ரீபாதராயர். அவரை பூஜித்து, போற்றிப் பாடி, ஸ்ரீகோபாலகிருஷ்ண பிரதிமையையே நடனமாட வைத்த மகானுபாவர். ஸ்ரீபாதராஜரை ஸ்ரீபாதராயர் என்றும், ஸ்ரீவியாச ராஜரை ஸ்ரீவியாசராயர் என்றும் அழைக்கின்றனர்.

**தேஷாதி4பதிகெ பந்த குஹயோகவனெ நூகி1**
**தா சிம்ஹாஸனவேரி மெரெதனெ கோலெ**
**தா சிம்ஹாஸனவேரி மெரெதனெ வ்யாஸமு**
**நீஷன்ன மொதலெ ப3லகொ3ம்பெ3 கோலெ ||48**

விஜயநகர சாம்ராஜ்யத்தில் கிருஷ்ணதேவராயருக்கு குஹ யோகம் என்னும் பெரிய ஆபத்து வந்தபோது, தாம் அந்த சமயத்தில் சிம்மாசனம் ஏறி, ராஜனைக் காப்பாற்றினார். அந்த நற்செயலுக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் ராஜன், ஸ்ரீவியாச ராஜரை சிம்மாசனத்தில் அமர்த்தி, ரத்னாபிஷேகம் செய்தார். அவரின் விருப்பப்படி, சில காலம், அந்த அரசை ஆண்டு அனைவரையும் மகிழ்வித்தார் ஸ்ரீவியாசராஜர். அடுத்த 5 நுடி களில் ஸ்ரீராகவேந்திரரின் மகிமைகளைக் கூறி வணங்குகிறார் தாசர்.

**தண்டகமண்டலுத4ர பண்டிதராதா4ர**
**குண்டலிஷயனன ப4ஜகர கோலெ**
**குண்டலிஷயனன ப4ஜக ராகவேந்த்ரர**
**கொண்டாடி பத3ன குணிஸுவெ கோலெ ||49**

தண்டகமண்டலுதர = தண்ட, கமண்டலங்களை தரித்த, பண்டித ராதார = பண்டிதர்களுக்கு ஆதாரமாக விளங்கிய, குண்டலி ஷயனன பஜக = சேஷசயனனை (ஸ்ரீஹரியை) பக்தியுடன்

வணங்கும், ஸ்ரீராகவேந்திர தீர்த்தரை, கொண்டாடி = போற்றி (மகிமைகளைப் பாடி) பதன குணிஸுவெ = அவரின் பாதங்களை திரும்பத் திரும்ப தியானிக்கிறேன்.

**தந்த்ரசாரகளிகெ அர்த்த[2]வன்னு ஸ்வ**
**தந்த்ரதிந்தலி ரசிஸித கோலெ**
**ஸ்வதந்த்ரதிந்தலி ரசிஸித ராகவேந்த்ரர**
**பந்த[2]வித்த[3]ல்லி ப[3]லகொ[3]ம்பெ[3] கோலெ ||50**

ஸ்ரீமதாசார்யரின் கிரந்தங்கள் அனைவருக்கும் சுலபமாக புரியுமாறு டிப்பணிகளை எழுதி, உடன், ஸ்வதந்த்ர கிரந்தங் களையும் இயற்றி, சாஸ்திரங்களை படிப்பவர்களுக்கு மிகப் பெரும் உதவியை செய்தார் ஸ்ரீராகவேந்திரர். பிரம்மசூத்ர பாஷ்யத்திற்கு 'தந்த்ரதீபிகா' என்னும் டீகையை எழுதி யிருக்கிறார். ஸ்ரீராகவேந்திரர பந்தவித்தல்லி= ஸ்ரீராகவேந்திரரின் பரம்பரையினரிடம், அதாவது அவரை வணங்குபவர்களிடம் நான் அனுமதி பெறுகிறேன் என்று பொருள்.

**வேதசாஸ்த்ராம்ருதசார ப[3]ல்ல ராம**
**வேதவ்யாஸர ப[4]ஜகர கோலெ**
**ராமவேதவ்யாஸ ப[4]ஜக ராகவேந்த்ரர**
**பாதவித்த[3]ல்லி ப[3]லகொ[3]ம்பெ[3] கோலெ ||51**

வேதசாஸ்திராம்ருதசார பல்ல = வேத சாஸ்திரங்கள் என்னும் அமிர்தத்தை, அவற்றின் உண்மையான விளக்கங்களை சொல்வதில் வல்லவர். நான்கு வேதங்கள், பாரத, சந்திரிகா, மூல ராமாயணம் மற்றும் இவற்றிற்கு எதிராக இல்லாமல், அவற்றின் கருத்துகளுக்கு பொருந்துமாறு இவரது கிரந்தங்கள் இருக்கின்றன. சீதாபதி ஸ்ரீராமசந்திரனை, வேதவியாசரை சிறப்பாக வணங்கி, அந்த பகவத் ரூபங்களின் அருளுக்குப் பாத்திரமானவர், ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள். நரசிம்ம, ஹயக்ரீவ ரூபங்களையும் வணங்குபவர். பாதவித்தல்லி = அவரது சன்னிதானத்தில்.

**துங்கப4த்ராதீ1ர மந்த்ராலயதல்லி**
**மங்கள மஹிமரெனிபரெ கோலெ**
**மங்கள மஹிமரெனிப ராகவேந்த்ர**
**ரங்க்4ரிக1மலவ ப3லகொ3ம்பெ3 கோலெ ||52**

மங்களமஹிமரெனிப = மங்கள மூர்த்தியான ஸ்ரீஹரியின் மகிமைகளைப் பற்றி தெளிவான ஞானம் உள்ளவர். அல்லது தமது மகிமைகளின் புகழால் நலன்களைக் கொடுப்பவர் அல்லது புகழப்படும் தகுதிகளையுடைய மகிமைகளை உடையவர். துங்கபத்ரா தீரத்தில், மந்திராலயத்தில் வசிக்கும் ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள்.

**குருராகவேந்த்ரர சரணபங்கஜவன்னு**
**ஸ்தி2ரபுத்தி4யிந்த ஸ்மரிஸுவெ கோலெ**
**ஸ்தி2ரபுத்தி4யிந்த ஸ்மரிஸி நா பேள்வேனு**
**சரஸிஜாக்ஷன சரிதெய கோலெ ||53**

ஸ்திரபுத்தியிந்த = ஸ்ரீஹரிவாயுகளின் அருளை நமக்குப் பெற்றுத் தருவார் என்னும் திடமான நம்பிக்கையில்; சரஸிஜாக்ஷன = தாமரைக் கண்ணனான ஸ்ரீகிருஷ்ணனை. ஸ்மரிஸி பேள்வேனு = குருவை வணங்கியவாறு. அவரின் அருளுடன் சொல்வேன்.

**ராஜராஜேஷ்வர சத்யாபி4னவதீர்த்த**
**ராஜகராப்ஜ சம்பூ4த கோலெ**
**ராஜகராப்ஜ சம்பூ4த சத்யாதி**
**ராஜர மொதலெ ப3லகொ3ம்பெ3 கோலெ ||54**

தன்னுடைய தபோ பலத்தினால், மிகச்சிறந்த தேஜஸ்ஸுடன் விளங்கிய, ஸ்ரீசத்யாபினவ தீர்த்தர் என்னும் யதி ஸ்ரேஷ்டரின் கரகமல சஞ்சாதரான (அவரிடம் சன்யாச தீக்ஷையைப் பெற்ற) ஸ்ரீசத்யாதிராஜரை, பலகொம்பெ = வணங்குகிறேன்.

**க்ஷீர நதியதீர வேலூர புரவாஸ**
**சாரசஜ்ஜனர பொரெவனெ கோலெ**
**சாரசஜ்ஜனர பொரெவ சத்யாதி4ராஜ**
**தீ4ர யதிகள ப3லகொ3ம்பெ3 கோலெ ||55**

ஸ்ரீசத்யாபினவ தீர்த்தர், கும்பகோணத்து சிந்தாமணி வித்யா தீஷர் என்னும் மிகச்சிறந்த பண்டிதருக்கு சன்யாச ஆசிரமத்தைக் கொடுத்து ஸ்ரீசத்யாதிராஜர் என்று பெயர் சூட்டி, திக்விஜயத்திற்காக அனுப்பினார். அவர் தனது குருகளுக்கு முன்னரே இறைவனடி சேர்ந்ததால், ஸ்ரீசத்யாபினவ தீர்த்தரின் பீடத்தில் அதிக காலம் இருக்கவில்லை. குருபரம்பரையில் வர வில்லை. ஸ்ரீசத்யாதிராஜரின் பிருந்தாவனம் ராயவேலூர் என்னும் கிராமத்தில் இருக்கிறது. ஸ்ரீசத்யாதிராஜர், அபரோக்ஷ ஞானிகளான ஸ்ரீமோகனதாசரால் வணங்கப்பட்ட மகாஞானிகள். சாரசஜ்ஜனர = ஆன்மிகத்தில் ஈடுபட்ட, முக்திக்கு யோக்யர் களான ஜீவர்களை. பொரெவ = காப்பாற்றும் (ஸ்ரீசத்யாதிராஜர்).

**சத்யபோத4ரெம்ப சத்குருசரணவ**
**சித்ததொளிட்டு சரிஸுவெ கோலெ**
**சத்ததொளிட்டு ஸ்மரிஸி நா பேள்வேனு**
**சித்ததொல்லப4ன சரிதெய கோலெ ||56**

இரவில் சூரியனைக் காட்டியவர். இது போன்ற பல அற்புதங் களை நிகழ்த்திய, மார்க்கண்டேயரின் அம்சம் என்று அழைக்கப் படும், ஸ்ரீசத்யபோத தீர்த்தரை வணங்குகிறார் தாசர். தாம் செய்யும் அனைத்து செயல்களையும் இவரை வணங்கியே செய்கிறேன் என்கிறார்.

**பரம குருகளாத புரந்தராயன**
**பரம க்ருபாபாத்ர விஜயராயர கோலெ**
**பரம க்ருபாபாத்ர விஜயராயர பாத**
**பரமபக்தியலி ஸ்மரிஸுவெ கோலெ ||57**

ஹரிதாச ஸ்ரேஷ்டரும், அபரோக்ஷ ஞானிகளுமான ஶ்ரீபுரந்தர தாசரை, விஜயதாசரை இங்கு வணங்குகிறார்.

**தேவநாராயண பூ⁴தேவி மொரெ கேளி**
**தேவகியல்லி ஜனிஸித கோலெ**
**தேவகியல்லி ஜனிஸி தாருணி**
**தேவி பா⁴ரவனெல்ல ஏளுஹித கோலெ ||58**

தைத்யர்களின் அதர்ம செயல்களை பொறுக்காத பூதேவி, பிரம்மனிடம் முறையிட, அவளின் துக்கத்தை பரிகரிக்க வேண்டி, தர்மத்தை நிலைநாட்டுமாறு, ஶ்ரீஹரியிடம் வேண்டினார் பிரம்மன். அப்படியே செய்வதாக அவர்களுக்கு வாக்களித்த ஶ்ரீஹரி, கிருஷ்ண ரூபத்தில் தேவகியிடம் அவதரித்து, பூதேவியின் துக்கத்தைப் போக்கினார். அவருக்கு ப்ராக்ருத தேகத்தில் என்றும் அவதாரம் இல்லை. துஷ்ட ஜனர்களின் மோகனத்திற்காக (அவர்களை ஏமாற்றுவதற்காக), சாதாரண மக்களைப் போல (ஒரு மனிதக் குழந்தையைப் போல) பிறப்பதைப் போல காட்டினார். அவரின் அனைத்து தேகங்களும் சிதானந்த ரூபங்களே. பூ-பாரவனெல்ல = பூதேவியின் பாரத்தை முழுவதுமாக, இளுஹித = பரிகரித்தான்.

**ஷகட பூ¹தனிவத்ஸ ப³க தே⁴னுக கம்ஸ**
**முகா²த்யரன்னு மடுஹித கோலெ**
**முகா²த்யரன்னு மடுஹி வாஸுதேவ தே**
**வகியர பந்த³ன பிடிஸித கோலெ ||59**

ஷகடாசுர, பூதனி, வத்ஸாசுர, பகாசுர, தேனுகாசுர ஆகிய கம்சனின் தலைமையில் வந்த அசுரர்களை, மடுஹித = அழித்தான் / கொன்றான். வசுதேவ தேவகி ஆகியோர் ஶ்ரீஹரி யின் பக்தர்கள் என்று நாரதர் மூலமாக அறிந்த கம்சன், அவர்களை சிறைச்சாலையில் அடைத்தான். அங்கேயே ஶ்ரீகிருஷ்ணனின் அவதாரம் நடந்தது. ஶ்ரீகிருஷ்ணன் வெறும்

பத்து வயதாக இருக்கும்போதே, கம்சாதி தைத்யர்களைக் கொன்று, தன் தாய் தந்தையர்களை சிறையிலிருந்து மீட்டார்.

**ஹெத்த$^{1}$ தாயிய மொலெயர்தி$^{1}$யலி நலிதுண்டு**
**மத்தெ பா$^{3}$லலீலெ தோரித கோலெ**
**மத்தெ பா$^{3}$லலீலெ தோரி தோஷவ படி$^{3}$ஸி**
**முத்$^{1}$யாகெ$^{3}$ ப$^{1}$ட்டவ கட்டித கோலெ ||60**

ஹெத்த தாயிய = தேவகியின். ஆர்தியலி = பாசத்துடன். நலிதுண்டு = மகிழ்ச்சியுடன் (முலைப்பால்) உண்டு. மத்தெ = மீண்டும். (தான் 10 வயதான சிறுவனாக இருந்தாலும், கோகுலத்தில் யசோதையின் மகனாக வளர்ந்ததால், தன் பால லீலைகளை அவர்கள் காணவில்லை என்னும் துக்கத்தைப் போக்கி), பாலலீலையைக் காட்டி. சிறிய குழந்தையாக முலைப் பால் குடித்து, குறும்பு விளையாட்டுகளால் தேவகியை மகிழ்வித்து, முத்யாகெ = தாத்தாவான உக்ரசேனனுக்கு. பட்டவ கட்டித = (கம்சனைக் கொன்றபிறகு) மீண்டும் அரசாட்சியைக் கொடுத்தான்.

**ஜரெய சுத$^{1}$னு தானு ஜகளக்கெ ப$^{3}$ஹனெந்து**
**கரெஸித விஸ்வகர்மன்ன கோலெ**
**கரெஸித விஸ்வகர்மன்ன த்வாரகா**
**புரவ நிர்மிஸெந்தாக்ஷணதலி கோலெ ||61**

ஜரெய சுதனு = ஜரா என்னும் அரக்கியின் மகன் ஜராசந்தன். ஜராசந்தனின் மகள்களான அஸ்தி, ப்ராஸ்தி என்னும் இருவரும் கம்சனின் மனைவியர். ஸ்ரீகிருஷ்ணன் கம்சனைக் கொன்றுவிட்டான் என்ற செய்தியைக் கேட்டதும், ஸ்ரீகிருஷ்ணனைக் கொல்ல வேண்டும் என்று ஆயுதமேந்தி போருக்காக வந்த ஜராசந்தன், ஸ்ரீகிருஷ்ணனால் தோற்கடிக்கப் பட்டான்.

பூமியின் பாரத்தைக் குறைக்கும் தன் வேலைக்காக, ஜராசந்தன் ஒவ்வொரு முறையும் போருக்கு 21 அக்ஷோஹிணி

சைன்யத்துடன் வருவதால், அந்த சைன்யங்களை மட்டும் கொன்று, ஜராசந்தனை கொல்லாமல் விட்டார் ஸ்ரீகிருஷ்ணன். 21வது முறையாக, ஜராசந்தனுடன், காலயவனன் அனேக எண்ணிக்கையிலான சைன்யங்களுடன் மதுராவை நோக்கி வந்தபோது, ஸ்ரீகிருஷ்ணன் விஷ்வகர்மனை நினைத்தார். உடன் வந்த விஷ்வகர்மனிடம், கடலின் நடுவே துவாரகையை நிர்மாணிக்குமாறு ஆணையிட்டார்

ஸ்ரீகிருஷ்ணன். உடனடியாக துவாரகை நிர்மாணமாயிற்று. மதுராவின் மக்களை, தன்னுடைய அற்புத மகிமையால், துவாரகைக்கு அனுப்பி, அவர்களை காப்பாற்றிய ஸ்ரீகிருஷ்ணனின் மகிமையை தாசர் இங்கு விவரிக்கிறார்.

**த்வாரகாபுரத ஸ்ருங்கார வர்ணிஸலு**
**மூரு கண்ணவகெ வஷவல்ல கோலெ**
**மூரு கண்ணவகெ வஷவல்ல நால்காரு**
**மொரெயவரிகெ வஷவல்ல கோலெ ||62**

ஸ்ருங்கார வர்ணிஸலு = அந்த அழகினை / அலங்காரங்களை விவரிப்பதற்காக. மூருகண்ணவகெ = மூன்று கண்களையுடைய ருத்ரதேவருக்கு. வஷவல்ல = சாத்தியமில்லை. (முழுமையாக விவரிப்பதற்கு ருத்ரராலேயே சாத்தியமில்லை). நால்காரு மொரெயவரிகெ = சதுர்முக பிரம்மன் மற்றும் ஷண்முக இருவருக்கும். ஒரே நேரத்தில் வெவ்வேறு முகத்தினால் வெவ்வேறு விவரங்களை சொல்லிக் கொண்டு வந்தாலும், இவர்களாலும் துவாரகையின் அழகினை விவரிப்பதற்கு சாத்தியமில்லை.

**த்வாரத்வாரகளிகெ த[1]ளிருதோரணகளு**
**மேருவிகெ பொ[1]ன்னகலஷவு கோலெ**
**மேருவிகெ கலஷகன்னடி மனோ**
**ஹாரவாகிருவுது ஸடெ[1]யல்ல கோலெ ||63**

த்வாரத்வாரகளிகெ = ஒவ்வொரு வீட்டின் வாயிலிலும். தளிரு தோரணகளு = உற்சவ கொண்டாட்டம் போன்ற தோரணங்கள் கட்டியிருந்தன. மேருவிகெ பொன்னகலஷவு = மேரு பர்வதத்திற்கு தங்கத்தால் வேயப்பட்ட கூரையைப் போல, வீடுகளும் ஜொலித்தன. சடெயல்ல = இப்படிப்பட்ட அலங்காரங்கள் அங்கு இருந்தன என்பது பொய் அல்ல.

**ஹதினாரு சாவிர சது[3]ரேர மந்திரவு**
**மதனய்யன மனெ மத்[4]யெ கோலெ**
**மதனய்யன மனெ மத்[4]ய ப்ரதேஷ**
**அது[3]பு[4]த[3]வாகி பெ[3]ளகோ[3]து[3] கோலெ ||64**

நரகாசுரனைக் கொன்று, அவன் சிறையில் வைத்திருந்த 16,000 பெண்களை ஸ்ரீகிருஷ்ணன் துவாரகைக்கு அனுப்பி, கருட வாகனனாக, சுவர்க்க லோகத்திற்கு சென்று அங்கிருந்து பாரிஜாத மரத்தைக் கொண்டு வந்தபிறகு, அந்த அனைத்து பெண்களையும் திருமணம் செய்துகொண்டார். இவர்கள் அனைவரும் தங்களின் வரத்தினால் லட்சுமி சன்னிதானம் உள்ளவராக, ஸ்ரீகிருஷ்ணனின் மனைவிகளாவதற்கு தகுதி பெற்றிருந்தனர். சதுரேர = அழகான பெண்கள். மந்திரவு = அரண்மனைகள். மதனய்யன மனெ = மன்மதனின் தந்தையான ஸ்ரீகிருஷ்னனின் அரண்மனை நடுவில் ஜொலிக்கிறது. அதுபுதவாகி = அற்புதமாக.

**நாரிருக்மிணி சத்யபாமாதேவி மத்தெ[1]**
**வாரிஜமுகி[2]யர் நால்கெ[1]ரடு கோலெ**
**வாரிஜமுகி[2]யர் நால்கெ[1]ரடு சஹிதாகி[3]**
**வாரிஜநாப கு[1]ளிதி[1]த்த[3] கோலெ ||65**

நாரிருக்மிணி = ருக்மிணிதேவி. வாரிஜமுகியர் நால்கெரடு = தாமரை போன்ற அழகான முகங்களை உடையவர்களுடன் (ஷண்மஹிஷியர்). ஜாம்பவதி, நீலா, பத்ரா, மித்ரவிந்தா, காளிந்தி, லட்சணா ஆகிய ஆறு பேரும், லட்சுமிதேவியின் ஸ்வரூபத்தில்

இருந்தாலும், ஸ்ரீகிருஷ்ணனின் நியத பத்னியர் (எப்போதும் அவனின் மனைவியரே) என்று, ஷண்மஹிஷியர் என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் தாரதம்யத்தில், கருட சேஷ ருத்ரர்களைவிட கீழும், அவர்களின் மனைவியரான சௌபர்ணி, வாருணி, பார்வதியரின் மேலும் இருக்கின்றனர். ருக்மிணி சத்ய பாமாவும் சாக்ஷாத் லட்சுமி ஸ்வரூபர்களே. சிதானந்த தேகங்களை உடையவர்கள். வாரிஜனாப = பத்பனாபனான ஸ்ரீகிருஷ்ணன். குளிதித்த = அமர்ந்திருந்தான்.

**ஸ்ரீ பூ4 ரமணனாத ஸ்ரீகிருஷ்ணரமனெகெ**
**சுப4த்ரெ முய்யா த1ருதா1ளெ கோலெ**
**சுப4த்ரெ முய்யா த1ருதா1ளெ ஹஸ்தினாபுர**
**பூ4பு4ஜரெல்ல ப3ருதா1ரெ கோலெ ||66**

ஸ்ரீ-பூ தேவியருடன் ((ருக்மிணி, சத்யபாமா இவர்களுடன்) இருக்கும் ஸ்ரீகிருஷ்ணனின் அரண்மனைக்கு. முய்யா= வஸ்திர ஆபரணங்கள். தருதாளெ= (தன் கணவனின் அரண்மனை யிலிருந்து) கொண்டு வருகிறாள். ஹஸ்தினாபுர பூபுஜரெல்ல = ஹஸ்தினாபுரத்து மக்கள் அனைவரும் (துரியோதனன் மற்றும் இதர அரசர்கள் அனைவரும்) ஸ்ரீகிருஷ்ணனின் தரிசனத்திற்காக துவாரகைக்கு வருகின்றனர்.

**த4ர்மபீ4மார்ஜுன நகு1ல சஹதேவரு**
**பெ1ர்மெயிந்தலி பொ1ரவண்டு1 கோலெ**
**பெர்மெயிந்தலி பொ1ரவண்டு1 திக்பாலகரு**
**கூர்மெயிந்தலி ப3ருதா1ரெ கோலெ ||67**

பாண்டவர்கள் மிகவும் மகிழ்ச்சியுடன் (பெர்மெ = அன்பு) அன்புடன் வருகின்றனர். இந்திராதி திக்பாலகர்கள் மிகவும் பணிவுடன் (கூர்மெ = பணிவு) வந்து, தங்களின் சேவையை அளித்து மகிழ்கிறார்கள்.

**இந்த்ரனு தானெ கஜேந்த்ரனேரிகொண்டு**
**மந்தக3மனெ ஷசிஸஹிதலி கோலெ**
**மந்தக3மனெ ஷசிஸஹித வஜ்ரவ த4ரிஸி உ**
**பேந்த்ரனரமனெகெ ப3ருதா1னெ கோலெ ||68**

ஶ்ரீகிருஷ்ணன் மகாலட்சுமி ரூபர்களான ஶ்ரீ-பூ-தேவியர்களுடன் துவாரகையில் வசித்துவர, சுவர்க்கம் முதலான உலகங்களுக்கு நடுவில் இதற்குக் கிடைத்த சிறப்பினை (அனைத்து தேவதைகளுக்கும் இங்கு வந்து போவது ஒரு புனித யாத்திரை போல இருந்ததாம்) 66வது ஸ்லோகம் முதல் 85வது ஸ்லோகம் வரை பாடுகிறார் ஶ்ரீதாசர்.

கஜேந்திரன் = ஐராவதம். மந்தகமனெ ஷசிஸஹிதலி = தனது மனைவியான சசி தேவியுடன் சேர்ந்து, வஜ்ரவ = வஜ்ராயுதத்தை. உபேந்த்ரன ரமனெகெ = ஶ்ரீகிருஷ்ணனின் அரண்மனைக்கு வருகிறார். இந்திராதி அனைத்து தேவர்களும், தங்கள் குடும்பத்தினருடன், பக்தியுடன் ஶ்ரீகிருஷ்ணன் இருக்குமிடத்திற்கு யாத்திரையாக வருகின்றனர்.

வருபவர்கள், தங்களின் ஆயுதங்களுடன் வருகிறார்கள். அந்த ஆயுதங்கள் அனைத்தும் ஶ்ரீஹரி கொடுத்தவையே என்பதை நன்கு அறிந்திருந்த அவர்கள், அவை அனைத்தும் ஶ்ரீஹரியின் அபராவதாரங்களே (அவனிடமிருந்து வேறுபாடுகள் இல்லாதவை) என்றும் அவற்றை ஶ்ரீஹரிக்கு சமர்ப்பிக்க வேண்டும் என்னும் நோக்கத்தில் வருகின்றனர் என்கிறார் தாசர்.

**ஹுதபு4ஜ தன்ன ஸ்வாஹாதேவிய கூடி**
**அதிஷயதி3ம் மேஷவேருத்த1 கோலெ**
**அதிஷயதி3ம் மேஷவேரி ஷக்திய பிடிது**
**க்ரது1பதி1 மனெகெ ப3ருதானெ கோலெ ||69**

ஹுதபுஜ = அக்னிதேவன். சதி = மனைவி (ஸ்வாஹா தேவி). அதிஷயதிம் = உற்சாகத்துடன். மேஷவேரி = தன்னுடைய

வாகனமான செம்மறியாட்டில் ஏறி. ஷக்திய பிடிது = ஷக்தி என்னும் தன்னுடைய ஆயுதத்தைப் பிடித்தவாறு. க்ரதுபதி = யக்ஞபதி (அனைத்து செயல்களுக்கும் பலன்களைக் கொடுக்கும் ஸ்வாமி). ஜீவர்களுக்கு அவர்களின் தகுதிக்கேற்ப பலன்களைக் கொடுக்கும் ஸ்ரீகிருஷ்ணன்.

**யமனு மஹிஷவேரி க$^{3}$மக$^{1}$திந்தலி சதி**
**ஷாமலாதேவி சஹிதலி கோலெ**
**ஷாமலெ சஹித த$^{3}$ண்டா$^{3}$யுத$^{4}$ தரிஸி**
**ராமன மனெகெ ப$^{3}$ருதா$^{1}$னெ கோலெ ||70**

யமன், தனது வாகனமான எருமையின் மீதேறி, தனது மனைவியான ஷாமலாதேவியுடன், தனது ஆயுதமான தண்டாயுதத்தை (பாவம் செய்பவர்களை தண்டிக்கு யமதண்டம் என்னும் தனது ஆயுதத்தை) ஏந்தி, ஸ்ரீராமனின் அரண்மனைக்கு வேகமாக (கமக = வேகம்) வருகிறான்.

**நிருருதி தானொந்து நரன பெ$^{1}$க$^{3}$லனேரி**
**பரமாப்த ஸ்த்ரீயனொடகூடி கோலெ**
**பரமாப்த ஸ்த்ரீயனொடகூடி கு$^{1}$ந்த$^{1}$த$^{4}$ரிஸி**
**த$^{4}$ராத$^{4}$ரன மனெகெ$^{3}$ ப$^{3}$ருதா$^{1}$னெ கோலெ ||71**

நிருருதி = நிருருதி - தென்மேற்கு திசையின் அதிபதி. இவன் நரவாகனன் (மனிதனை வாகனமாகக் கொண்டிருப்பவன்). பெகலனேரி = வாகனத்தின் முதுகில் ஏறி. பரமாப்த ஸ்த்ரீய னொடகூடி = தனது ப்ரியளான மனைவி தீர்க்காதேவியுடன். குந்த = நிருருதியின் ஆயுதமான ஈட்டியை ஏந்தி, தராதரன மனெகெ = பூமியை ரசாதலத்திலிருந்து தன்னுடைய கோரைப் பற்களால் எத்தி, மேலே எடுத்து வந்த வராக அவதாரத்தி லிருந்து அபின்னனான (வேறுபாடு இல்லாத) ஸ்ரீகிருஷ்ணனின் வீட்டிற்கு வருகிறார்.

**வருணனு தானொந்து மக$^{1}$ரியேரிகொண்டு**
**சிரிபா$^{4}$கீ$^{3}$ரதியனொடகொண்டு கோலெ**
**சிரிபா$^{4}$கீ$^{3}$ரதியனொடகொண்டு பா$^{1}$ஷத$^{4}$ரிஸி**
**சிரிவத்ஸனரமனெகெ ப$^{3}$ருதா$^{1}$னெ கோலெ ||72**

வருணன் = மேற்கு திசைக்கு அபிமானி. அவனின் வாகனம் - முதலை. சிரிபாகீரதி = அவனின் மனைவி ஸ்ரீகங்காதேவி. (ஸ்ரீமகாலட்சுமிக்குப் பிறகு சரஸ்வதி பாரதியருக்குக் கீழ் இருக்கும் தேவஸ்த்ரீயர்கள் அனைவரும் லட்சுமி சன்னிதானம் உள்ளவர்கள் ஆகையால், ஸ்ரீ என்று அழைக்கப் படுபவர்களே). வருணனின் ஆயுதம் 'பாஷ'. சிரி வத்ஸன மனெகெ = ஸ்ரீதேவியையே சின்னமாக தரித்த ஸ்ரீஹரி, ஸ்ரீவத்ஸன். இவரின் அரண்மனைக்கு வருணன் வருகிறார்.

**மருத$^{1}$ தே$^{3}$வனொந்து எரளெயமேலேரி**
**தருணி ப்ராவஹியொடகூடி கோலெ**
**தருணி ப்ராவஹியொடகூடி த்$^{4}$வஜத$^{4}$ரிஸி ஸ்ரீ**
**த$^{4}$ரன மனெகெ ப$^{3}$ருதா$^{1}$னெ கோலெ ||73**

மருததேவனு = வாயுதேவர் (இவர் முக்யவாயுதேவரல்ல. பிரவஹ வாயு). எரளெய மேலேரி = மான் மீதேறி. ப்ராவஹி = பிரவஹ வாயுவின் மனைவி குமுத்வதி. த்வஜ = அவரின் ஆயுதமான த்வஜவை பிடித்துக் கொண்டு, ஸ்ரீதரின் வீட்டிற்கு வருகிறார்.

**வித்தபதியொந்து உத்தமஹயவேரி**
**சித்ததோல்லபெய ஒடகூடி கோலெ**
**சித்ததொல்லபெய ஒடகூடி ககதரிஸி**
**கர்தன்ன மனெகெ ப$^{3}$ருதா$^{1}$னெ கோலெ ||74**

வித்தபதி = குபேரன். அவனின் வாகனம் குதிரை. சித்த தொல்லபய = அன்புடன் கணவனின் மனதை வசப்படுத்தியவள் - பெயர் - ரித்தி. அவனின் ஆயுதம் கட்கம். கர்தன்ன மனெகெ = அனைத்திற்கும் காரணனான, தன்னை தனாதிப என்னும்

ஸ்தானத்திற்கு நியமித்த ஸ்ரீகிருஷ்ணனின் வீட்டிற்கு, குபேரன் வருகிறார்.

**ஈஷான தானொந்து வ்ருஷப⁴வேரிகொண்டு**
**ஸ்ரீசதிதேவியொடகூடி கோலெ**
**ஸ்ரீசதிதேவியொடகூடி ஷூலத⁴ரிஸி நா**
**ரசிம்ஹன மனெகெ ப³ருதா¹னெ கோலெ ||75**

ஈஷான = கைலாசாதிபதி மகாதேவன் (ருத்ரர்). அவரின் வாகனம் ரிஷபம். அவரின் மனைவி, தக்ஷ புத்ரியான சதிதேவி. அவரின் முக்கிய ஆயுதம் - திரிசூலம். அவரின் உபாஸ்ய மூர்த்தி - சங்கர்ஷணாத்மக நரசிம்மன். அவனே ஸ்ரீகிருஷ்ணன்.

**ஹரியே சர்வோத்தம ஹரியே பரதேவதெ**
**ஹரிதாஸரெம்போ பி³ருதி³ன கோலெ |**
**ஹரிதாஸரெம்போ பி³ருதி³ன ஹெக்காளெ**
**ஹிரிபாகிலொளு ஹிடிஸிதரு கோலெ ||76**

ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்றும், புருஷார்த்தங்களுக்காக வணங்கி போற்றப்பட வேண்டிய உத்தம தேவதை அவரே என்றும், ஹரிபக்தர்கள் அனைவரும் கோஷமிடுகிறார்கள். ஸ்ரீகிருஷ்ணனின் அரண்மனையின் மகாத்வாரத்தில், இவ்வாறு கோஷமிட்டவாறு இருக்கின்றனர். த்வாரகாவாசியான ஸ்ரீகிருஷ்ணனை ஹரிதாசர்கள் (பிரம்மாதி தேவதைகள்) அனைவரும் எப்போதும் ஜயஜய என்றவாறு இருக்கின்றனர் என்று பொருள்.

**ஒப்பனெ விஷ்ணுவினொப்ப தெய்வகளில்லெந்த³**
**ப்பரதிந்த நாக³ஸ்வர கோலெ |**
**அப்பரதிந்த நாக³ஸ்வரங்கள**
**ஹெப்பாகிலொளகெ நுடிஸோரு கோலெ ||77**

ஒப்பனெ விஷ்ணுவு = விஷ்ணுவிற்கு சமமோ, அதிகமோ வேறு யாருமில்லை. (ஏகமேவாத்விதீயம் என்னும் வேதத்தின்

சாரம் இது). விஷ்ணுவு - எல்லா இடங்களிலும் வியாப்தன் மற்றும் ஆனந்தபூர்ணனும் ஆனவன். அப்பரதிந்த = நாம் பேசுவதைப் போல தெளிவாக நாகஸ்வரத்தை வாசித்துக் கொண்டிருந்தனர். ஸ்ரீகிருஷ்ணனின் அரண்மனையின் மகா த்வாரங்களில், எந்நேரமும் ஒளிர்ந்து கொண்டிருக்கும் மங்கள வாத்தியங்கள், ஸ்ரீகிருஷ்ணனின் எந்த மகிமைகளை போற்றிக் கொண்டிருக்கிறது என்பதை அடுத்த சில நுடிகளில் விளக்குகிறார் ஸ்ரீமோகனதாசர்.

**க$^{2}$ளன பெ$^{3}$ன்னசர்ம ஸுளிது$^{3}$ பெ$^{4}$ரிகெ$^{3}$ ஹாகி**
**அலவபோ$^{3}$த$^{4}$ரெ ஜகத்குரு கோலெ |**
**அலவபோ$^{3}$த$^{4}$ரெ ஜகத்குருகளெந்தெந்து**
**ச$^{2}$லதிந்த பே$^{4}$ரிய ஹொடெஸோரு கோலெ ||78**

களன = துஷ்டர்களின். பேரி = முரசு. அலவபோதரெ = பூர்ண ப்ரக்ஞர். ஜகத்குருகளு = சஜ்ஜனர்களுக்கு ஞானோபதேசம் செய்பவர். ஸ்ரீமதானந்த தீர்த்தரே ஜகத்குருகள் என்று ஸ்ரீகிருஷ்ணனின் அரண்மனையின் மகாத்வாரத்தில் நின்று கோஷித்துக் கொண்டிருக்கின்றனர்.

**விஷ்ணுசர்வோத்தம விஷ்ணு பரதேவதெ**
**விஷ்ணுதாஸரெம்ப பி$^{3}$ருதி$^{3}$ன கோலெ |**
**விஷ்ணுதாசரெம்ப பி$^{3}$ருதி$^{3}$ன ட$^{2}$க்கெ$^{1}$ய**
**க$^{4}$ட்$^{1}$யாகி எத்தி நிலிஸோரு கோலெ ||79**

விஷ்ணுதாசர்கள் (விஷ்ணு பக்தர்களான பிரம்மாதிகள்), விஷ்ணுவே சர்வோத்தமன் என்றும் பரதேவதை என்றும் எப்போதும் நிரூபிக்கிறார்கள். விஷ்ணுதாஸரெம்ப பிருதின = என்று சொல்வதில், விஷ்ணுதாசர் என்பது ஒரு விருது என்று சொல்கிறார்.

க்ருபணவத்ஸல நின்ன கருணெகெ
உபமெகாணெனோ சந்ததவு காஷ்யபியொளகெ
புதரிந்த ஜகதாதிபன கிங்கரனெனிஸி மெரெதெ ||

என்று ஜகதொடெயனாத ஸ்ரீஹரியின் கிங்கரர்கள் (தாசர்கள்) என்பது ஒரு பெருமை / கர்வம் / விருது என்று ஜகன்னாத தாசர் சொல்கிறார்.

**மததொளு மத்வமத வ்ரததொளு ஹரிதின**
**க$^1$தெ$^2$யொளு பா$^4$கவதவென்னி கோலெ |**
**க$^1$தெ$^2$யொளு பா$^4$கவதவென்னி இதரந்தெ**
**ப்ரதிமெயொள் விஷ்ணுபிரதிமெயென்னி கோலெ ||80**

பிறப்பு இறப்பு சுழற்சியில் இருக்கும் இந்தப் பிறவியானது மிகவும் துக்கமயமானது என்பது அனைவரின் அபிப்பிராயம். அதிலிருந்து முக்தனாகி, நித்யசுக ஸ்தானத்தை அடையும் வழியை உபதேசிக்கும் மதங்கள், ஜீவ-ஜகத்-ஈஸ்வர ஆகியவற்றின் சம்பந்தங்களை நிரூபிக்கின்றன. மதங்கள் பற்பல உண்டு. அவற்றின் நடுவில் 'மத்வ மதவே மதவு என்னி' என்றால், யதார்த்தத்தை (உண்மையை) உரைக்கும் சிறந்த மதம் மத்வ மதமே என்று சிந்தியுங்கள் என்று பொருள்.

உடற் சுத்தம் மற்றும் மன சுத்தம் ஆகியவற்றை செய்யும் நியமங்களுக்கு விரதம் என்று பெயர். அவற்றில், ஹரிதின என்றால், ஏகாதசி விரதம். இதையே சிறந்த விரதம் என்று சிந்தியுங்கள்.

கதெ என்றால் பரமாத்மனின் மகிமைகளை நிரூபிக்கும் புராணாதி சாஸ்திரங்கள். இவற்றில் ஸ்ரீமத் பாகவதமே சிறந்தது. அலைபாயும் மனதினை கட்டுப்படுத்தவும், தியானத்தில் மனதை ஒருமுகப்படுத்தவும், பிரதிமைகள் அவசியமானவை. ஆவாஹனம் செய்த அல்லது சுயம்புவாக பகவத் சன்னிதானம் இருக்கக்கூடிய பவித்ரமான பிரதிமைகள், சாதகர்களுக்கு மிகவும் தேவை. இந்த பிரதிமைகளில், ஸ்ரீவிஷ்ணு சன்னிதானம் இருக்கும் பிரதிமைகளே சிறந்தவை. சிவ, சூர்யாதி பிரதிமைகளைவிட, சர்வோத்தமனான

விஷ்ணுவின் உபாசனைக்கு, இவையே சிறந்தது என்று சிந்தியுங்கள்.

ஸ்ரீவிஷ்ணுவின் பிரதிமைகளில், அவரின் பரமமங்கள அழகான மூர்த்தியை, சங்கு சக்கரம் ஆகிய ஆயுதங்களை ஏந்தியவராக, கிரீடம் முதலான ஆபரணங்களை அணிந்தவராக, ஸ்ரீவிஷ்ணுவை தியானிக்க வேண்டும். ஸ்ரீஹரி, நிராகாரன் அல்ல - சிதானந்தாத்மக உருவமுள்ளவன்.

**ஈசல ப[3]னதொளு கோ[3]க்ஷீர கு[1]டித[3]ந்தெ**
**நீசர சங்க[3] சுஜனரு கோலெ |**
**நீசர சங்க[3] சுஜனரு மாடலு**
**ஈசெ நீடுவரிகெ அனுமான கோலெ ||81**

ஸ்ரீகிருஷ்ணனின் அரண்மனையின் மகாத்வாரத்தில் இருக்கும் வாத்தியங்களும், அங்கே நிலைத்திருக்கும் வித்வாம்சர்களும் எப்போதும் ஸ்ரீகிருஷ்ணனின் சர்வோத்தமத்வத்தை சொல்லிக் கொண்டிருப்பதைப் போல, அதற்கு எதிர்ப்பதமாக தவறான ஞானத்தைத் தரும் துஷ்ட செயல்கள், கெட்ட கிரந்தங்கள் ஆகியவை முக்தியோக்யர்களால் ஆதரிக்கப்படுபவை அல்ல என்பதும் இங்கு தெரிய வருகிறது.

ஈசல பனதொளு = பனை மரத்தின் அடியில் நின்று பால் குடித்தாலும், அவன் கள் குடிக்கிறான் என்றே சொல்வதைப் போல, சஜ்ஜனர்கள், துர்ஜனர்களின் நட்பில் இருந்தால், அவர்களும் துர்ஜனர்களே என்று சந்தேகம் வருவது சகஜம். ஆகையால், சஜ்ஜனர்கள், துர்ஜனர்களிடமிருந்து தூர விலகியிருக்க வேண்டும் என்கிறார்.

**சூரிஜனர சங்க[3] சுதெ[4]ய ப்ராஷனத[3]ந்தெ[1]**
**ஹொரணெகுணவுள்ள அத[4]மர கோலெ |**
**ஹொரணெகுணவுள்ள அத[4]மர சஹவாஸ**
**நீருள்ளி திந்த தெரனந்தெ கோலெ ||82**

துர்ஜனர்களின் நட்பினால் சஜ்ஜனர்களும் துர்ஜனரோ என்று சந்தேகம் வருவது மட்டுமல்ல. அவர்களும் கெட்டவர்கள் ஆகிவிடக்கூடிய சாத்தியம் இருக்கிறது என்கிறார் தாசர். அதமர்களின் நட்பானது, வெங்காயம் தின்பதைப் போல அதாவது, வெங்காயத்தைத் தின்றால் நம்மிடம் வரும் துர்மணம், அஞ்ஞானம் ஆகிய குணங்கள் வருவதைப் போல. சஜ்ஜனர்களின் நட்பு இவற்றைப் போக்கவல்லவை. சஜ்ஜனர்களின் நட்பு, அமிர்தத்தைக் குடித்ததைப் போல. கெட்டவர்களின் நட்பு, மேலே விளக்கியதைப் போல இருக்கும் என்கிறார் தாசர்.

**ஒள்ளெ மனுஜர ஸங்க$^{3}$ மல்லிகெ முடிதந்தெ**
**கு$^{2}$ல்லுகு$^{1}$மதிய சஹவாச கோலெ |**
**கு$^{2}$ல்லகு$^{1}$மதிய சஹகாச மாடலு**
**முல்லங்கி$^{3}$ திந்து$^{3}$ தெகு$^{3}$வந்தெ கோலெ ||83**

ஒள்ளே மனுஜர சங்க = நல்லவர்களின் நட்பு. மல்லிகெ முடி தந்தெ = மல்லிகையை சூடினால் வரும் நறுமணத்திலிருந்து கிடைக்கும் மகிழ்ச்சியைப் போல. அதற்கு எதிர்ப்பதமாக, குல்லு மதிய சஹவாச = கெட்டவர்களின் நட்பு, முள்ளங்கியைத் தின்றால் வரும் துர்மணம் நம்மையும் சுற்றி இருப்பவர் களையும் தொந்தரவு செய்வதைப் போல கெட்டதாகும் என்கிறார்.

**பா$^{4}$வக்ஞர ஸங்க ஷ்யாவிகெ$^{3}$ உண்ட$^{3}$ந்தெ**
**பா$^{4}$வவனரியத ப$^{3}$லுஹீன கோலெ |**
**பா$^{4}$வவனரியத ப$^{3}$லுஹீனர ஸங்க**
**பே$^{3}$வின ஹால குடிதந்தெ கோலெ ||84**

பாவக்ஞர = சத்வகுணமுள்ளவர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களுடன் கூடி நற்செயல்களை செய்பவர்கள், பாவக்ஞர்கள். இவர்களின் நட்பு, ஷ்யாவிகெ = பாயசத்தைக் குடித்ததைப் போல மகிழ்ச்சியைக் கொடுப்பதாகும். பாவவனரியத = பக்தி

என்றால் என்ன என்று அறியாதவர்கள். பலுஹீனர் = கெட்டவர்கள். இவர்களின் நட்பு, பேவின ஹாலு = வேம்பு இலையின் பாலைக் குடித்ததைப் போல கசக்கும் என்கிறார் தாசர்.

**பா[3]ளுவர சங்க ஹாலோக[3]ருண்ட[3]ந்தெ[1]**
**பா[3]ளுவெகெ[3]ட்ட[1] அத[2]மர கோலெ |**
**பா[3]ளுவெகெட்ட அத[2]மர சஹவாஸ**
**ஹேளபாரத்து[3] தி[1]ந்த[3]ந்தெ[1] கோலெ || 85**

பாளுவர சங்க = பகவத் விஷயத்தில் ஞான, பக்தி உள்ளவர் களின் நட்பில். ஹாலோகர = பால். உண்டந்தே = குடித்ததைப் போல, மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. பாளுவெ கெட்ட = தற்காலிக விஷயங்களில் மனதைக் கொடுத்து, வாழ்க்கையை வீணடிப்பவர்கள். அதமர சஹவாஸ = அதமர்களின் நட்பு. ஹேளபாரத்து திந்தந்தெ = மலத்தைத் தின்பதுபோல, மிகவும் கெட்ட செயல் ஆகும் என்கிறார் தாசர்.

**ஹரித்ரோஹி குருத்ரோஹி மரளிமாத்ருத்ரோஹி**
**வரவைஷ்ணவ த்ரோஹி பித்ருத்ரோஹி கோலெ |**
**வரவைஷ்ணவ த்ரோஹி பித்ருத்ரோஹி ஸ்வாமித்ரோஹி**
**நெரளு பித்த[3]வர நெரெ ஹொல்ல கோலெ ||86**

ஹரித்ரோஹி = ஸ்ரீஹரியின் ஆணையை ஏற்று நடக்காமல், அவற்றை விலக்குபவர்கள். ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வத்தை ஏற்காமல், மித்யா ஞானத்தைப் பெற்றவர்கள்.
குருத்ரோஹி = குருகளை ஏமாற்றுபவர்கள், குருவின் ஆணையைக் கேட்டு நடக்காதவர்கள்.
மரளி = மற்றும்.
மாத்ருத்ரோஹி = பெற்ற தாயுடன் சண்டை போட்டு. அவளுக்கு துக்கத்தைக் கொடுப்பவர்கள்.
வைஷ்ணவத்ரோஹி = விஷ்ணு பக்தர்களுக்கு துரோகம் செய்து, அவர்களுக்கு கெட்டதை செய்பவர்கள்.

பித்ருத்ரோஹி = தந்தையுடன் சண்டை போட்டு, அவரின் விருப்பத்திற்கு எதிராக நடப்பவர்கள்.
ஸ்வாமித்ரோஹி = அனைவரின் ஸ்வாமியான ஸ்ரீஹரிக்கு மற்றும் நமக்கு சம்பளம் / வேலை கொடுக்கும் எஜமானனுக்கு, மரியாதை / பணிவு காட்டாமல், அதற்கு எதிராக நடப்பவர்கள்.
நெரளுவித்தவர = இத்தகையவர்களின் நிழலை மிதித்தாலும் கூட - இவர்களின் நட்பினைப் பாராட்டினாலும்.
நெரெஹொல்ல = இவர்களின் அருகில் நிற்பது கூட சஜ்ஜனர்களுக்கு அழகல்ல.

**க[1]த்தெ[1] கு[1]து[3]ரெ ஒந்தெ அத்தெ சொஸெயு ஒந்தெ**
**ஹெத்த[1]ம்ம ஒந்தெ ஹெண்டத்தி ஒந்தெ கோலெ ।**
**ஹெத்த[1]ம்ம ஒந்தெ ஹெண்டத்தி ஒந்தாத மேலெ**
**வ்யர்த்த[1]வு மது[3]வெ நினக்யாகெ கோலெ ||87**

ஹெத்தம்ம ஒந்தெ ஹெண்டத்தி ஒந்தெ = பெற்ற தாயும், மனைவியும் ஒன்றே (ஒருவரே) ஆனால், நினகெ = இப்படி ஒருவராக சிந்திக்கும் உனக்கு. வ்யர்த்தவு மதுவெ = திருமணமே வீண் அல்லவா?

உலகத்தில் வேறுபாடுகளே இல்லை என்ற பிரமையில், ஐக்யரூப சிந்தனையிலேயே மோக்ஷம் கிடைக்கும் என்று கூறிவிட்டு, தங்கள் வாழ்க்கையில் அபேத சிந்தனை செய்தால், அந்த மோக்ஷம் கிடைப்பது எப்படி? ஆகையால், ஜீவபிரம்மரின் ஐக்ய சிந்தனையைப் போக்கும் பேதஞானம் நமக்கு நிரந்தரமாகக் கிடைக்கும் வண்ணம் நாம் முயற்சி செய்ய வேண்டும்.

அனைத்தும் ஒன்றே என்னும் விஷயத்தை வழக்கத்தில் கொண்டு வந்தால், சமூகத்தில் பெரும் குழப்பமே ஏற்படும். 'கம்யாகம்ய விபாகஸ்ச ஸ்வரூபைக்யே கதம் வத?'

அனைவரும் ஸ்வரூபத்தில் ஒருவரே என்றுவிட்டு பெண்களின் சமூகத்தில் (தாய், மாமியார், மருமகள், மகள், மனைவி) மட்டும் ஏன் பேதங்களைக் கூறுகிறாய்? என்று கேட்கிறார் தாசர்.

**அக்கதங்கியு ஒந்தெ மக்களு சொஸெ ஒந்தெ**
**சிக்கம்ம ஒந்தெ ஹெண்டதி ஒந்தெ கோலெ |**
**சிக்கம்ம ஒந்தெ ஹெண்டதி ஒந்தாத மேலெ**
**ரொக்கவ்யச்ச மாடி மதுவ்யாகெ கோலெ ||88**

முந்தைய ஸ்லோகத்தின் பொருளே இங்கும் தொடர்கிறது. அக்கா, தங்கை, மகள், மருமகள், சித்தி, மனைவி - என அனைவரும் ஒன்றே (ஒருவரே) என்று சிந்தித்தால், மிகவும் செலவழித்து, ஆடம்பரமாக நீ செய்துகொள்ளும் திருமணம் எதற்கு? அது வீணான செயலே என்று சொல்கிறார் தாசர்.

**ஹிட்டு1பூ3தி3யொந்தெ ரொட்டிமுச்சளியொந்தெ**
**க1ட்டி1கெ3 ஒந்தெ க1ப்பொ3ந்தெ3 கோலெ |**
**க1ட்டி1கெ3 ஒந்தெ க1ப்பொ3ந்தா3த3 மேலெ**
**க1ட்டி1கெ3 யாகெ1 மெல்லுவல்லி கோலெ ||89**

ஜீவ-ஜீவர்களின் வேறுபாடு இல்லை என்று சொல்வதால் ஆகக் கூடிய குழப்பங்களை / விளைவுகளை நிரூபித்த தாசர், இந்த நுடியிலிருந்து துவங்கி, ஜட-ஜடங்களில் வேறுபாடுகளை ஏன் அறியவேண்டும் என்பதை விளக்குகிறார். ரொட்டியும், அதன் மேல் மூடிவைக்கும் தட்டும் ஒன்றா? மாவும் அதிலிருந்து செய்யப்படும் பண்டமும் ஒன்றா? மரக்கட்டையும், கரும்பும் ஒன்றா? அப்படி ஒன்று என்று சொன்னால், கரும்பிற்கு பதில், அந்த கட்டையையே நீ ஏன் கடிப்பதில்லை?

**ஹாலு மஜ்ஜிகெயொந்தெ கோ1ளி கோ1கி1லெயொந்தெ**
**மாளிகெ3 ஒந்தெ ப3யலொந்தெ கோலெ |**
**மாளிகெ3 ஒந்தெ ப3யலொந்தாதரெ**
**ஹேளபாரத்து தி1னவல்யாகெ கோலெ ||90**

பாலும் தயிரும் ஒன்றா? கோழியும் குயிலும் ஒன்றா? மாளிகையும் குடிசையும் ஒன்றா? இப்படி அனைத்திற்கும் இல்லை என்று பதில் சொல்லும் நீ, சொல்லக்கூடாத (கழிவு) பொருட்களை ஏன் தின்பதில்லை என்று கேட்கிறார் தாசர்.

**க3ங்கெ3ய த1டி3யல்லி லிங்க3வனர்ச்சிஸி**
**அங்கயலிட்டு பூஜிஸுவெ கோலெ |**
**அங்கயலிட்டு பூஜிஸுவெ எலெ பா1பி1**
**லிங்க3னு நீனு ஒத்த3ஹாங்கே3 கோலெ ||91**

கங்கை நதிக்கரையில் அமர்ந்து, உள்ளங்கையில் லிங்கத்தை வைத்து, அதை பூஜிக்கிறாய், அர்ச்சிக்கிறாய். அந்த லிங்கமும், நீயும் ஒன்றா என்று கேட்கிறார் தாசர். பூஜிப்பவரும், பூஜிக்கப்படும் விஷயமும் ஒன்று அல்ல என்று சிந்திக்க வேண்டும் என்கிறார்.

**ஷிவனு நீனாதரெ ஷிவராணி நினகே3னோ**
**அவிவேகி மனுஜ ஈ மாது கோலெ |**
**அவிவேகி மனுஜ ஈ மாது கேளிதரெ**
**கவிகளு நக3ரெ கைஹொய்ய கோலெ ||92**

சிவராணி = பார்வதி. நீயே சிவன் ஆகிவிட்டால், பார்வதி உனக்கு என்ன ஆகவேண்டும்? அவிவேகி = புத்தியற்ற. அறிவற்ற மனிதனே, நீ இதற்கு சொல்லும் பதிலால், கவிஞர்களும் உன்னைப் பார்த்து, கைகொட்டி சிரிப்பார்கள்.

**வேதப்ராமாண்யவெந்து சுஜனரெல்லர**
**போ3தி4சுதிப்ப பௌத்த4ன கோலெ |**
**போ3தி4சுதிப்ப பௌத்த4ன எளெதொய்யு**
**கா1தெ3ண்ணெயொளாகெ கெடஹோரு கோலெ ||93**

சுஜனரெல்லர = முக்திக்கு தகுதியுடைய ஸ்வரூபமுள்ள ஜீவர்களுக்கு. வேதாப்ராமாண்யவெந்து = வேதங்கள் ஆதாரமாக உள்ளன என்று, பௌத்தன = புத்த தத்வங்களையே, போதிசுதிப்ப

= உபதேசிக்கும். பௌத்தன = புத்தனையே பின்பற்றக்கூடிய உன்னை (மாயாவாதியை), காதெண்ணெயொளு கெடஹோரு = நரகத்தில் கொதிக்கும் எண்ணையில் யமதூதர்கள் தள்ளுவர்.

**இல்லி மாத்ர பேத[4] அல்லி ஒந்தே எம்ப**
**க்ஷுல்லகர ஹிடிது[3] ஹல்லுரிது[3] கோலெ |**
**க்ஷுல்லகர ஹிடிது[3] ஹல்லுரிது[3] யமராய**
**கல்லுகா[3]ணகெ[1] ஹாகிஸுவ கோலெ ||94**

இல்லி மாத்ர = இஹத்தில் (இந்த உலகத்தில்) மட்டும். அல்லி- பரத்தில் (இந்த உடலை விட்ட பிறகு). பேத = ஜீவ, ஜட, ஈஷ்வர ஆகியவை பேதம் (வேறுபாடு) கொண்டவை என்றும், அல்லி ஒந்தே = பரத்தில் ஜீவ-ஈஸ்வர ஐக்கியம் என்று சொன்னால், க்ஷுல்லகர = துர்ஜனர்கள். ஹல்லுரிது = பற்களை பிடுங்கி எறிந்து, கல்லுகாணகெ = கல்லால் ஆன எண்ணெய் எடுக்கும் இயந்திரத்தில் போட்டு பிழிந்துவிடுவர் யமதூதர்கள்.

**அப்ப நாராயணனனிப்பந்த[1] அரமனெ**
**அப்ராக்ருதத வைகுண்ட கோலெ |**
**அப்ராக்ருதத வைகுண்டவெம்போ[3]து[3]**
**ஸ்வப்ராகாஷத பரமாத்ம கோலெ ||95**

அப்ப நாராயணனு = சர்வஸ்ருஷ்டிகர்த்தனான ஶ்ரீஹரி. இப்பந்த அரமனெ = வசிக்கும் நகரம் / அரண்மனை. அப்ராக்ருதத வைகுண்ட = அழிவில்லாத / லட்சுமிகரமான வைகுண்டம். (இதைப்போலவே ஶ்ரீஹரியின் பிற நகரங்களான அனந்தாசன, ஸ்வேதத்வீபம் ஆகிய இடங்களில் கூட என்று நினைக்க வேண்டும்). ஸ்வப்ரகாஷத பரமாத்ம = ’வைகுண்ட’ என்றால் சுயம்பிரகாசமான பரமாத்மனே ஆவார். (மகாலட்சுமி யுடன்கூடி வைகுண்டத்தில் வசிக்கும் ஶ்ரீஹரியையும், அழிவில்லாத அரண்மனையைக் கொண்ட வைகுண்டத்தையும் பற்றி விளக்குகிறார் தாசர்).

**ஸூத்த விரஜாநதி மத்தெ ஆனந்தவன**
**சித்தஜனய்யனரமனெ கோலெ |**
**சித்தஜனய்யனரமனெஹெம்போது**
**உத்தமோத்தம வைகுண்ட[2] கோலெ ||96**

லட்சும்யாத்மகமான வைகுண்டத்தைச் சுற்றிலும், விரஜாநதி ஓடுகிறது. அந்த நதியும் லட்சுமிஸ்வரூபாத்மகமே ஆகியிருக்கிறது. சித்தஜனய்யா = மன்மதனின் தந்தை ஸ்ரீகிருஷ்ணன் (அவனே வைகுண்டன்). உத்தமோத்தம வைகுண்ட = வைகுண்டத்தில் இருக்கும் ஸ்ரீ, பூ, துர்கா பாகங்களில் மிகச்சிறந்தது, வைகுண்டனின் வைகுண்ட பாகம் (ஸ்ரீஹரியின் அரண்மனை).

**பச்செ நீலவைடூர்ய நிச்சளவஜ்ர**
**அச்சமாணிகத அளவட்டு[1] கோலெ |**
**அச்சமாணிகத அளவட்டு[1] ஹரிபுர**
**அச்சுதனிப்ப அரமனெ கோலெ ||97**

பச்சை, நீலம், வைடூர்யம், வைரம், மாணிக்கம் ஆகிய நவரத்னங்களால் கட்டப்பட்ட அரண்மனைகளால், வைகுண்டாதி ஸ்ரீவிஷ்ணுவின் மூன்று நகரங்களும், அழகாக / அற்புதமாக ஜொலிக்கின்றன. வஜ்ர, மாணிக்கங்கள் லட்சும்யாத்மக மானவையே. நிச்சள = தோஷங்கள் அற்ற (சுத்தமான / அழிவற்ற). அச்ச = பரிசுத்தமான. அளவட்டு = கட்டடங்கள். அச்சுதனிப்ப = ஸ்ரீஹரி வசிக்கும் இடங்கள்.

**ஸிரிதேவி தா முரஹரன பட்டணதல்லி**
**விரஜியெந்தெந்து கரெஸோளு கோலெ |**
**விரஜியெந்தெந்து கரெஸி வைகுண்டக்கெ**
**ப[1]ரிக[4]ரூபதலி மெரெவளு கோலெ ||98**

சிரிதேவி = ஸ்ரீமகாலட்சுமிதேவி. முரஹரன = முர என்னும் அசுரனைக் கொன்ற ஸ்ரீஹரி. விரஜியெந்தெந்து = விரஜெ என்னும் பெயரால். கரெசோளு = அழைக்கப்படுகிறாள்.

வைகுண்டக்கெ = லட்சும்யாத்மகமான வைகுண்ட நகரத்திற்கு. பரிகரூபதலி = கோட்டை, வாயில், பிரகாரம், கோபுரம் என அனைத்து ரூபங்களிலும் இருந்து. மெரெவளு = அருள் பாலிக்கிறாள். [பிரம்மாதி தேவதைகள், லட்சுமிதேவி மூலமாக ஸ்ரீஹரியிடம் செல்வார்களே தவிர, அவளை தவிர்த்துவிட்டு செல்ல மாட்டார்கள் என்பது இங்கு மறைபொருள். இப்படியாக, லட்சுமிதேவி வைகுண்டத்தில் விரஜா ரூபத்தில் நிலைத்திருக்கிறாள்].

**உத்தராதி நால்கு தத்தளிசுவ த்⁴வார**
**முத்து மாணிக்ய நவரத்ன கோலெ ।**
**முத்து மாணிக்ய நவரத்ன முல்லிய**
**எத்தி மேல்கட்டி பி³கிதிவெ கோலெ ॥99**

உத்தராதி = வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு ஆகிய நான்கு திசைகள். தத்தளிசுவ = ஒளிரும். நவரத்ன கோலெ = நவரத்னங்களால் கோர்க்கப்பட்ட மிகவும் அழகாக ஒளிரும் மாலைகள். எத்தி மேல்கட்டி பிடிதிவெ = இவற்றை மேலே கட்டி தொங்க விட்டிருக்கிறார்கள்.

**ஜயவிஜயாத்யெண்டு த்வாரபாலகரு**
**ஜயதேவி ரமணரமனெகெ கோலெ ।**
**ஜயதேவி ரமணரமனெ பா³கிலொளு**
**ஜயஜவெனுத நிந்தா³ரெ கோலெ ॥ 100**

ஸ்ரீஹரியின் அந்தப்புரத்திற்கு அருகில் இருக்கும் (சப்த ப்ராகாரங்களில் முதலாவதான) கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய மகாத்வாரங்களில் இருக்கும் துவாரபாலகர்கள் முறையே, ஜய-விஜய, பல-ப்ரபல, நந்த-சுனந்த மற்றும் குமுத-குமுதாக்ஷ. ஜயதேவி = ஸ்ரீமன் மகாலட்சுமி. ஜயஜயவெனுத நிந்தாரெ = அனைவரிலும் சிறந்தவராக விளங்கும் ஸ்ரீஹரியை போற்றிப் புகழ்ந்தவாறு நின்றிருக்கிறார்கள்.

**க[1]ஸவெல்ல பரிமள கெ[1]ஸரெள்ள ஸ்ரீகந்த[4]**
**பி[3]ஸருஹனேத்ரன அரமனெ கோலெ |**
**பிஸருஹனேத்ரன அரமனெயொளகெ[3]ல்ல**
**கு[1]ஸுமத[3] மளெக[3]ருவுது கோலெ ||101**

பிஸருஹனேத்ர = தாமரைக் கண்ணன். குசுமத மளெகரெவுது = சுகந்த புஷ்பங்கள் தரும் நறுமணங்களையொத்த மணத்தைக் கொடுக்கிறது. ஸ்ரீவைகுண்டனின் அரண்மனையில் இருக்கும் குப்பைகள், கூளங்கள் ஆகியவை கூட மலர்கள் கொடுக்கும் நறுமணத்தைப் போலவே மணக்கின்றன என்கிறார் தாசர்.

**கா[3]ஜின நெலெக[3]ட்டு[1] ராஜமாணிக[1] கோ[3]டெ[3]**
**ஈ ஜட[3]த்ரவ்யவல்லில்ல கோலெ |**
**ஈ ஜட[3]த்ரவ்யவல்லில்ல பு[1]ஸியெல்ல**
**ஸ்ரீ ஜனார்த்தனனரமனெயல்லி கோலெ ||102**

காஜின= ஸ்படிக. நெலகட்டு= தரை. கோடெ = அரண்மனையின் சுவர்கள். ராஜமாணிக = மிகச்சிறந்த ரத்னங்களால் வேயப் பட்டவை. ஈ ஜடத்ரவ்யவல்லில்ல = அங்கு (வைகுண்ட நகரத்தில்), அழியக்கூடிய பொருட்கள் என்று எதுவுமே இல்லை. அனைத்துமே அப்ராக்ருதமானவை. ஸ்படிக மாணிக்களும்கூட அப்ராக்ருதமானவையே.

**சூர்யசந்த்ரரு அக்னி மொதலாகி இத்த[3]வர**
**கா[1]ர்யவெ அல்லி த[1]ளுவில்ல கோலெ |**
**கா[1]ர்யவெ அல்லி த[1]ளிவில்ல நம்ம சுர**
**வர்ய அச்யுதனரமனெயொளு கோலெ ||103**

சூர்ய, சந்திரன், அக்னி ஆகியோருக்கு அங்கு (அச்சுதனின் அரண்மனையில்) ஒளி பாய்ச்சும் வேலையே இல்லை. தளுவில்ல = அவர்களின் செயலுக்கு அங்கு இடமேயில்லை (சந்தர்ப்பமே இல்லை). அனைத்தும் ஸ்ரீஹரியின் பிரகாசத் தினாலேயே ஒளிர்கின்றன. ’ந தத்பாஸயதே சூர்யோ ந ஷஷாங்கோ ந பாவக:’ (கீதை).

**அல்லி சர்வரு சுக²தல்லி இப்பரு நோடெ**
**அல்லி சர்வரு யஷஸ்விகளு கோலெ ।**
**அல்லி சர்வரு யஷஸ்விகளு சபெ⁴யொளு**
**எல்லரு சஹாயபரரெய்ய கோலெ ||104**

அல்லி = பிரம்மாதி முக்தர்கள் வசிக்கும் வைகுண்டத்தில். நோடெ = சாஸ்திரங்களில் சொல்லப்பட்டவற்றை பார்த்துப் படித்து புரிந்துகொண்டால். சர்வரு = அங்கிருக்கும் அனைத்து முக்தர்களும். சுகதல்லி இப்பரு = துக்கத்தின் சாயலே இல்லாமல், முழுமையான சுகத்தில் இருக்கின்றனர். அல்லி சர்வரு யஷஸ்விகளு = தமது (தகுதிக்கேற்ப அடைந்த) ஞானாதி குணங்களால் அங்கிருக்கும் அனைவரும் அறிஞர்களே. சஹாயபரரெய்ய = ஒருவருக்கொருவர் உதவி செய்யும் மனம் படைத்தவர்களே.

**மங்களவந்த¹ரு ஸ்ரீமந்த1ரு தா³**
**ரித்ர்யங்கள களெது நலிவரு கோலெ । தா**
**ரித்ர்யங்கள களெது நலிவரு முக்தி**
**யங்கனெ கூடி சுகி²பரு சர்வரு கோலெ ||105**

மங்களவந்தரு = மங்கள ஸ்வரூபர்கள் (சிதானந்த தேகத்தை உடையவர்கள்). ஸ்ரீமந்தரு = மோக்ஷ ஐஸ்வர்யத்தைப் பெற்றவர்கள். நலிவரு = எப்போதும் சுகத்துடன் நடமாடுபவர்கள். முக்தியங்கனெகூடி = முக்தியுடன் சுகமாக இருக்கின்றனர்.

யம்யம் சுகே காமயதே அர்த்தமத்ர சங்கல்பமாத்ராத் சகலோபி ஸ ஸ்யாத் - மத்வவிஜயம்.

முக்தியில் முக்த ஜீவர்கள் எந்தெந்த பொருட்களை வேண்டும் என்று நினைக்கின்றனரோ, அவை நினைத்தவுடன், அவர்களுக்குக் கிடைத்து விடுகிறது. அதற்காக அவர்கள் எவ்வித முயற்சியும் செய்யவேண்டியதில்லை. இப்படி

யிருக்கையில், முக்தர்களுக்கு ஏழ்மை, வருத்தம் என்பது ஏது? இப்படிப்பவர்களே மஹைஸ்வர்யவந்தர்கள் என்கிறார் தாசர்.

**காமக்ரோத த4ர்மவெம்ப மாதுகளில்ல**
**ப்ரேமவன்யோன்ய மித்ரத்வ கோலெ |**
**ப்ரேமவன்யோன்ய மித்ரத்வ முக்தர**
**ஸ்தோமவென்னிந்து1 வர்ணிபெ கோலெ ||106**

முக்தர்களில் காம, குரோதம், பொறாமை போன்ற எவ்வித தோஷங்களும் இல்லை. முக்தர்கள் காமங்கள் (அதாவது விருப்பங்கள்) அனைத்தும் ஸ்ரீஹரியின் விருப்பத்தின்படியே ஆகும். அதற்கு எதிரான விருப்பங்கள் அவர்களுக்கு என்றும் இல்லை. ஒருவருக்கொருவர் காட்டும் நட்பு, அன்பு ஆகியவற்றால், அனைவரும் எப்போதும் மகிழ்ச்சியுடன் இருக்கின்றனர்.

**க1ண்ட1க1வெம்புது கனககேதகியல்லி**
**உண்டு சன்யாசி கரதண்ட கோலெ |**
**உண்டு சன்யாசி கரதண்ட ப3த்த3வ்யை**
**கு1ண்ட1தொ3ளுள்ளவர கரதல்லி கோலெ ||107**

கண்டக = முட்கள் (உடலில் குத்தினால் வலியைக் கொடுக்கக் கூடிய முட்கள்) வைகுண்டத்தில் இல்லை. ஆனால், தங்கத்தால் வேயப்பட்ட கேதகி என்னும் புஷ்பத்தில் மட்டும் முட்கள் இருந்தன. அந்த முட்களும் சுகந்தத்தையே பரப்பின.

அனைத்து முக்தர்களின் கைகளிலும் சன்யாசிகள் வைத்திருந்த தண்டத்தைக் காண முடியும். அனைவரும் இந்திரியங்களை அடக்கிய மஹாவிரக்தரே ஆனாலும், விரும்பியவற்றைப் பெறுபவர்களாக இருந்தனர். சன்யாசி தண்டமானது, மனம் முதலான இந்திரியங்களை தண்டித்து (அடக்கி), தன் வசத்தில் வைத்துக் கொண்டிருப்பதன் குறிப்பு ஆகும். பத்தவைகுண்ட தொளுள்ளவர கரதல்லி = ஜீவர்கள் அனைவரும் முக்தியிலும் ஸ்ரீஹரியின் தாசர்களே. ஸ்ரீஹரியின் விருப்பத்திற்கேற்ப

சுகத்தை அனுப்பவிப்பவர்களாக இருந்தாலும், விரக்தர்களாகவே இருந்தனர். வைகுண்டத்தில் இருப்பவர்கள் அனைவரும் சன்யாசிகளே. (வைராக்கியம் கொண்டிருந்தனர் - ஆனால் யதிகள் அல்ல. ஆனாலும், ஸ்வரூபத்திலேயே யதிகள் ஆனவர்களும் அங்கு சிலர் இருந்தனர்).

**ப[3]ஞ்சியரில்ல பதிகஞ்சத சதியில்ல**
**சஞ்செயலி மலகுவுதில்ல கோலெ |**
**சஞ்செயலி மலகுவுதில்ல அதிதிகளு**
**பு[4]ஞ்சிஸி சுகி[2]ஸதவரில்ல கோலெ ||108**

குழந்தை இல்லாத பெண்களே அங்கு இல்லை. அதாவது, அங்கும் குழந்தையைப் பெற்றுக் கொள்கிறார்கள் என்று அர்த்தமல்ல. இவ்வுலகத்தில், தங்களின் தகுதிக்கேற்ப பெற்ற குழந்தைகளிடம் அன்பு செலுத்திய தாயுள்ளம் கொண்டவர்கள், அங்கிருந்த பெண்கள் என்று பொருள்.

தங்களின் நியத கணவர்களுடன் அனைத்து சுகங்களையும் தங்களின் விருப்பப்படி அனுபவிக்கின்றனர். தங்கள் கணவர்களிடம் பயபக்தியுடன் நடந்து, அவர்களின் மகிழ்ச்சிக்குக் காரணராக இருக்கின்றனர், முக்தியில் பெண்கள்.

சஞ்செயலி மலகுவுதில்ல = முக்தர்கள் எவ்வித விதிமுறை களுக்கும் கட்டுப்பட்டவர்கள் அல்லர். அதாவது, அவர்களின் செயல்களுக்கான பலன்களை (சுக துக்கங்களை) அனுபவிக்காதவர்கள். மாலையில் தூங்குவதென்பது தவறான செயல். அதை முக்தர்களும் பின்பற்றுகின்றனர் என்று சொல்கிறார் தாசர். வைகுண்டத்தில் இருக்கும் அனைவரும் சாதாரணமாகவே தங்களுக்கு நியமிக்கப்பட்ட கடமைகளை சரியாக பின்பற்றுகின்றனர் - அதை மீறுபவர்கள் யாருமில்லை. அவர்களுக்கு தூக்கம் இல்லை. இருள் சூழும் இரவு என்னும் காலமே அவர்களுக்கு இல்லை.

புஞ்சிஸி சுகிசிதவரில்ல = அனைத்து முக்தர்களும், தங்களின் விருப்பத்திற்கேப, பக்ஷ போக்ஷ்யாதிகளை அடைகிறார்கள் மற்றும் அவற்றை உண்டு சுகங்களைப் பெறுகிறார்கள். ஆனால், அவர்களுக்கு பசி, தாகம் என்பது இல்லை. அதாவது அவை அவர்களுக்கு தொந்தரவு கொடுப்பதில்லை.

**விதவெயரில்ல விதுர புருஷரில்ல**
**மதுவெயு இல்லதவரில்ல கோலெ ।**
**மதுவெயு இல்லதவரில்ல நம்ம ஶ்ரீ**
**மதுஸூதனனிப்ப புரதல்லி கோலெ ।।109**

முக்ததேவதைகள் அனைவரும் கிருஹஸ்த ஜீவர்களே - தம்பதிகளே. அவர்களின் தாம்பத்யம் நித்யமானது. என்றும் பிறன்மனை நோக்குபவர்கள் அல்ல. அவர்களுக்கு என்றும் விதவை - விதுரன் நிலை என்றும் வருவதில்லை. அனைவரும் தம்பதிகளாக இருப்பதால், 'மதுவெயு இல்ல தவரில்லா' என்கிறார் தாசர். மதுசூதனனிப்பபுர = வைகுண்டாதி மூன்று உலகங்களில் இருப்பவர்களுக்கும், மதுசூதன ஶ்ரீஹரி தினமும் தனது தரிசனத்தைக் கொடுத்து, அவர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறார்.

சௌந்தர்யசாரைகரசம் ரமாபதே ரூபம் சதானந்தயதீஹ மோக்ஷிண: (சுமத்வவிஜயம்).

**அந்த[4] நபும்ஸகரில்ல மந்தபா[4]க்யரு இல்ல**
**நிந்தெ மாடுவ ஜனரில்ல கோலெ ।**
**நிந்தெ மாடுவ ஜனரில்ல நம்ம மு**
**குந்தனிருத்திப்ப புரதல்லி கோலெ ।।110**

முகுந்தன் இருக்கும் இடமான வைகுண்டத்தில், ஜீவ ஸ்வரூபத்தில் ஆண், பெண் என்னும் வேறுபாடு மட்டும் உள்ளது. அங்கு நபும்சகர்கள் இல்லை. மந்தபாக்யரு = இல்லை என்பவர்கள் இல்லை. ஏனெனில், அவர்கள் வேண்டுவது

அவர்களுக்கு கிடைத்துவிடுகிறது. நிந்தெ மாடுவ ஜனரில்ல = மற்றவர்களை திட்டும், சண்டையிடும் மக்கள் அங்கு இல்லை.

**ரேதோத்ஸர்ஜனவில்ல மூத்ர புரீஷவில்ல**
**வாதபித்த ஸ்லேஷ்ம மொதலில்ல கோலெ |**
**வாதபித்த ஸ்லேஷ்ம மொதலில்ல ஹஸித்ருஷெ**
**மாதுரவெம்போ தல்லில்ல கோலெ ||111**

இவ்வுலகத்தில் நடைபெறுவதைப் போல ஆண்-பெண் சங்கமங்கள் அங்கு நடைபெறுவதில்லை. அவர்களது தேகங்கள் சிதானந்தாத்மகமானதால், முக்தர்களின் தேகத்தில் வாதம், பித்தம் ஆகிய பிரச்னைகள் வருவதில்லை. பசி, தாகம், சோர்வு ஆகியவை அவர்களுக்கு இல்லை. ஆகவே அவற்றால் ஏற்படும் துக்கங்களும் அவர்களுக்கு இல்லை.

**அல்லில்ல த்ருண வ்ருக்ஷ அச்சீத்யாபே[4]த்[3]யவு**
**ப[3]ல்ல சஜ்ஜனர புண்யப[2]ல கோலெ |**
**ப[3]ல்ல சஜ்ஜனர புண்யப[2]ல கோலெ**
**அல்லி நாஷங்களில்லவு கோலெ ||112**

முக்தலோகங்களில் இருக்கும் மரம், செடி கொடிகளுக்கு, அவை அந்தந்த ரூபத்தில் இருந்த ஜீவர்களே ஆன காரணத்தால், அவற்றிற்கு பேதங்களால் அழிவில்லை. சில சமயம், முக்தர்களின் விருப்பத்திற்கேற்ப அவர்களின் புண்ணியங்கள் அங்கேயே நாசமடைகின்றன. கடல் அலைகள் எப்படி கடலிலேயே தோன்றி, அங்கேயே போய் சேர்கின்றதோ, அது போல, மரங்களும் அப்படியே வைகுண்டத்தில் இருக்கின்றன.

அபரோக்ஷ ஞானிகளான முக்தியோக்ய ஜீவர்களின் புண்ய பலன்களே (அவர்கள் அபரோக்ஷ ஞானம் பெற்றபிறகு), அவர்கள் மோக்ஷத்தில் எந்தவித சுகங்களையும் அனுபவிப்பதற்கு மூலகாரணமாக இருக்கின்றன.

**சாரூப்ய சாலோக்ய சாமீப்ய சாயுஜ்ய**
**சாரிஷ்டி பஞ்சவித முக்தி கோலெ |**
**சாரிஷ்டியெம்போது விரிஞ்சியொப்ப³கெ³**
**ஈரெரடு முக்தி இதரரிகெ கோலெ ||113**

சாரூப்ய, சாலோக்ய, சாமீப்ய மற்றும் சாயுஜ்ய என்பது முக்தர்களின் நான்குவித நிலைகளாகும்.

பரமாத்மனின் உறுப்புகளிலிருந்து பிறந்து, அவற்றையே வணங்கிக் கொண்டு, அந்த உறுப்புகளையே (அவற்றின் மகிமை களையே) உபாசனை செய்து, முக்தியில் அந்தந்த அங்கங் களிலேயே நுழைந்து, பற்பல போகங்களை அனுபவிக்கும் சூர்ய, சந்திராதி தேவதைகள் அடையும் முக்தி 'சாயுஜ்ய' ஆகும்.

இதர முக்திகள், ஸ்ரீஹரி எல்லா இடங்களிலும் இருப்பதால், அனைத்து உலகங்களிலும் இருக்கின்றன. முக்தர்களுக்குக் கிடைக்கும் ஸ்தானங்கள், அவர்களது ஞானாதி தகுதிகளின்படி, ஸ்ரீஹரியின் த்ரிதாமங்களுக்கு அருகிலும் இருக்கின்றன.

சார்ஷ்டி என்றால் சரிசமமான இடம் மற்றும் அதிகாரம் என்று பொருள். இதையே சந்தத்துக்காக சாரிஷ்டி என்றிருக்கிறார். இது சாயுஜ்ய முக்தியிலிருந்து சற்று வேறுபட்டதாக இருக்கிறது. சூர்யாதி முக்த தேவதைகள், கண் போன்ற ஸ்ரீஹரியின் அங்கங்களில் நுழைந்து, தத்தம் போகங்களை அங்கே அனுபவிப்பதைப் போல, பிரம்மனின் போகம் இல்லை. பிரம்மன் மட்டும் சர்வாங்க சாயுஜ்யத்தை அனுபவிப்பவர். அதுவே சார்ஷ்டி ஆகும்.

பிரம்மனைத் தவிர இதர முக்தர்களுக்கு சாலோக்யாதி நான்கு (ஈரெரடு) வித முக்திகளும் (அவரவர் தகுதிக்கேற்ப) கிடைக்கின்றன.

சார்ஷ்டி என்னும் சொல், சாயுஜ்ய என்னும் அர்த்தத்திலும் பயன்படுத்தப்படுகிறது. சர்வாங்க சாயுஜ்யத்தை சார்ஷ்டி என்று

சொல்லி, முக்திகள் இவ்வளவு விதங்கள் என்று இந்த ஸ்லோகத்தில் சொல்லியிருக்கிறார் தாசர்.

**அல்லி பஞ்சவித தாரதம்யகளுண்டு**
**அல்லி நீசோச்சபாவவு கோலெ |**
**அல்லி நீசோச்சபாவவு முக்தரு**
**ப³ல்ல ஹிரியரு ப⁴ஜிஸோரு கோலெ ||114**

அல்லி = முக்தியில். ஜட-ஜட, ஜட-ஜீவ, ஜட-ஈஸ்வர, ஜீவ-ஜீவ, ஜீவ-ஈஸ்வர என்னும் ஐந்து வித பேதங்கள் உள்ளன. நீசோச்ச பாவ = உச்ச / நீச என்னும் தாரதம்ய பாவமும் உண்டு. பல்ல ஹிரியர = தம்மை விட ஞானத்தில் உயர்ந்தவர்களை, அவர்களைவிட ஞானத்தில் குறைந்தவர்கள் வணங்குகிறார்கள்.

**அர எந்து ண்ய எந்து எரடு சுதா⁴ம்புதி⁴**
**இருதிப்பவச்யுதன புரதல்லி கோலெ |**
**இருதிப்பவச்யுதன புரதல்லி முகுதரு**
**ஸரிப³ந்த³ தெரதி க்ரீடிஸுவரு கோலெ ||115**

‘அர’ மற்றும் ‘ண்ய’ என்பது, இரு அமிர்த கடல்கள். முக்தர்கள் விளையாடும் / நடமாடும் கடல்கள். த்ரிதாமங்களை, ஸ்ரீ-பூ-துர்கா என்று மூன்று பாகங்களாக பிரிக்கும் அமிர்த கடல்கள் இவை. வைகுண்டம் முதலான தாம-த்ரயங்களை வர்ணிக்கும் போது, இவற்றைப் பற்றி படிக்கிறோம். இங்கு சொல்லப் பட்டிருக்கும் ‘அச்யுதன புரதல்லி’ என்பதற்கு ’ஸ்வேதத்வீப’ என்று பொருள் கொள்ளவேண்டும். சரிபந்த தெரதி = அவர்களின் விருப்பத்திற்கேற்ப.

**உத்தரக³ட³லொளு ஹத்தெண்டு யோஜன**
**உத்தமோத்தம ஷ்வேதத்வீப கோலெ |**
**உத்தமோத்தம ஷ்வேதத்வீப தொளகெல்ல**
**முத்தினந்தெ ஹொளெவ முகுதரு கோலெ ||116**

உத்தரகடலொளு = பாற்கடலில் வடக்கு பாகத்தில், மிகச்சிறந்த (முக்தர்களின் இருப்பிடமான) ஸ்வேதத்வீபம் இருக்கிறது. ஹத்தெண்டு யோஜன = ஸ்வேதத்வீபத்தின் நீளம் 18 லட்சம் யோஜனை (ஸ்ரீ, பூ, துர்கா பாகங்கள் ஒவ்வொன்றும் 6 லட்ச யோஜனைகள்). தாம-த்ரயங்களின் நீள-அகலங்களைப் பற்றிய குறிப்புகள், ஸ்ரீவாதிராஜரின் தத்வமஞ்சரி மற்றும் வரதவியாச விட்டல தாசரின் தத்வசார கிரந்தங்களில் கிடைக்கிறது. மேலும் இதைப் பற்றிய குறிப்புகள் ஸ்ருஷ்டிப்ரகரண சுளாதிகள் (வரதேந்த்ர ஹரிதாச சாகித்ய மண்டல, லிங்கசுகூர்) என்னும் கிரந்தத்தில் பக்கம் 243யிலிருந்து 250வரை விளக்கப் பட்டுள்ளது. முத்தினந்தெ ஹொளெவ = மிக பரிசுத்தமான (அழியக்கூடிய தேகம் இல்லாமல், சிதானந்தாத்மக தேகத்தைக் கொண்ட).

**அன்னந்தாஸவ நெம்போதின்னொந்து மனெ ஹரிகெ**
**க⁴ன்னோத³கத³ மேலெ மிஞ்சோது கோலெ |**
**க⁴ன்னோத³கத³ மேலெ மிஞ்சோது அதரொளு**
**மன்னெமன்னெயலி முகுதரு கோலெ ||117**

அன்னந்தாஸவ நெம்போது = அனந்தாசன என்பது. இன்னொந்து மனெ = ஸ்ரீஹரியின் இன்னொரு இருப்பிடம். இந்த அனந்தாசனம், கனோதகத்தின் (அடர்ந்த தண்ணீர் கொண்ட கடல்) மேல் நிலைத்திருக்கிறது. மிஞ்சோது = பளபள வென்று மிளிர்கிறது. மன்னெமன்னெயலி = ஒவ்வொரு வீட்டிலும், முக்தர்கள் வசிக்கின்றனர்.

**லக்ஷயோஜனத மேலிப்பதனந்தாஸன**
**லக்ஷ்மீஷனிஹ ஷ்வேதத்வீப கோலெ |**
**லக்ஷ்மீஷனிஹ ஷ்வேதத்வீபதொளகெ ஸ**
**ல்லக்ஷணவாகிஹர் முகுதரு கோலெ ||118**

அனந்தாசனம் ஒரு லட்ச யோஜனை உயரத்தில் இருக்கிறது. ஸ்வேதத்வீபமும் அப்படியே. இவ்விரண்டு இடங்களும்

பூமியின் மேல் இருக்கிறது. வைகுண்டம் - சத்யலோகத்தின் மேல் பாகத்தில் இருக்கிறது. இப்படி அனந்தாசனம், ஸ்வேத த்வீபம் இரண்டும் பூமிக்கு சற்று தூரத்தில் இருந்தாலும், பரோதிவ: அந்தரிக்ஷ லோகத்திற்கு அப்பால் இருக்கிறது. இந்த இரண்டு இடங்களிலும் (வைகுண்டத்தைப் போலவே) முக்தர்கள் வசிக்கின்றனர். சல்லக்ஷணவகிஹர் = முக்தர்கள் அனைவரும் அழகான லட்சணங்களுடன் இருக்கின்றனர்.

**ஸிரிவைகுண்ட தொளகிருதிப்ப முகுதரு**
**வரசதுர்புஜ பீதாம்பர கோலெ |**
**வரசதுர்புஜ பீதாம்பரகளுட்டு**
**ஹரிசாரூப்யன த⁴ரிசோரு கோலெ ||119**

வைகுண்டத்தில் இருக்கும் முக்த ஜீவர்கள், ஸ்ரீவைகுண்டனைப் போல, நான்கு கரங்களைக் கொண்டு, பீதாம்பர, வனமாலை ஆகியவற்றை தரித்து அலங்கரித்துக் கொண்டுள்ளனர்.

**ஒப்ப பிரம்மனு தேவதார்ச்சனெ மாடுவ**
**ஒப்ப பிரம்மனு அக்னிஹோத்ரவ கோலெ |**
**ஒப்ப பிரம்மனு அக்னிஹோத்ர மாடுத்திரெ**
**ஒப்ப பிரம்மனு பேள்வ புராண கோலெ ||120**

இங்கு பல முக்த பிரம்மர்கள் இருக்கின்றனர். அதில் ஒருவர் ரிக்வேத மந்திரங்களை ஸ்பஷ்டமாக உச்சரித்துக் கொண்டிருக்கிறார். இன்னொருவர் ஷக்வரி சந்தஸ்ஸின் ரிக்குகளில் காயத்ரி என்னும் சாமத்தையும், மற்றொருவர் புராணாதி அபௌருஷேய கிரந்தங்களை பாடம் சொல்லிக் கொண்டும் இருக்கிறார். இன்னொரு பிரம்மன், யக்ஞ நாமக விஷ்ணுவின் சிறப்புகளை சிந்தித்துக் கொண்டிருக்கிறார்.

பிரம்மன் என்னும் சொல்லிற்கு, ஸ்வயோக்ய-பூர்ணத்தை அடைந்த ஜீவன் என்னும் மற்றொரு அர்த்தமும் உண்டு.

**கஞ்சாக்ஷி ருக்மிணி கரெயெ பரலில்ல**
**சஞ்செயலி நாவு பந்தேவு கோலெ |**
**சஞ்செயலி நாவு பந்தரேனாயிது**
**அஞ்சபேடா அபய கொடுதேவெ கோலெ ||121**

இந்த நுடியிலிருந்து தொடங்கி, இக்கிருதியின் கடைசி நுடி வரை, பாரதத்தின் அஸ்வமேத பர்வத்தில் வரும் ஸ்ரீகிருஷ்ண, அர்ஜுன, ருக்மிணி மற்றும் சுபத்ரை ஆகியோரின் நடுவில் நடக்கும் ஒரு பேச்சுவார்த்தையை (கதை) விளக்குகிறார்.

நிந்தாஸ்துதியால் பாடப்பட்ட அழகான நுடிகள், ஸ்ரீகிருஷ்ணனின் சர்வோத்தமத்வத்தை, ஸ்ரீருக்மிணி சமேதனான ஸ்ரீகிருஷ்ணனின் கிருபா-கடாக்ஷத்தை, பிரம்மாதி தேவதைகளும் வணங்கி வேண்டுவர் என்னும் விஷயத்தை, ஸ்ரீகிருஷ்ணனின் பக்தவத்ஸலாதி மகிமைகளை விளக்கி யிருக்கிறார். அந்தந்த நுடிகளில் ஸ்ரீகிருஷ்ணனின் மகிமை களையும் பாடியிருக்கிறார்.

சுபத்திரை சொல்வது:
கஞ்சாக்ஷி ருக்மிணி = தாமரைக் கண்களை உடைய ருக்மிணி. கரெய பரலில்ல = நீ கூப்பிட்டதால் நாங்கள் வரவில்லை (ஸ்ரீகிருஷ்ணனின் தரிசனத்திற்காக, துவாரகைக்கு, நாங்களே வந்துள்ளோம்). சஞ்செயலி பந்தரேனாயிது = மாலையில் வந்ததில் என்ன தவறு? அஞ்சபேட = (சம்பந்திக்கு சரியாக மரியாதை செலுத்தவில்லையோ என்று எண்ணி) பயப்பட வேண்டாம். அபயகொடுத்தேவெ = (நாங்கள் எதையும் பொருட் படுத்துபவர் இல்லை என்று) தைரியம் கொடுக்கிறேன்.

**அத்திகெ மனெகெ பந்து ஹத்து களிகாயிது**
**எத்த ஓடிதளொ நமகஞ்சி கோலெ |**
**எத்த ஓடிதளொ நமகஞ்சி ருக்மிணி**
**இத்த பா அப⁴ய கொடுத்தேவெ கோலெ ||122**

சுபத்ரை சொல்வது: அத்திகெ மனெகெ பந்து = என் அண்ணன் (அண்ணி) ஸ்ரீகிருஷ்ணனின் வீட்டிற்கு வந்து. நமகஞ்சி எத்த ஓடிதளொ = நமக்கு பயந்து, அண்ணி எங்கு போனார்களோ, தெரியவில்லை. இத்த பா அபய கொடுத்தேவெ = ஹே ருக்மிணி. எங்கள் எதிரில் வா. தைரியம் கொடுக்கிறேன்.

**அத்திகெ நின்ன மைகெ ஹத்யாவெ ருத்[3]ராக்ஷி**
**நெத்தி மேலில்ல ஜடெ[3]க[3]ளு கோலெ |**
**நெத்தி மேலில்ல ஜடெ[3]க[3]ளு நின்ன ஜன**
**அர்த்தி[2]லி நோடி நகுதாரெ கோலெ || 123**

சுபத்திரை மேலும் சொல்வது:
ஹே ருக்மிணி (அண்ணி). ஸ்ரீகிருஷ்ணனை கைபிடித்த நீ, சிவ பக்தர்களைப் போல அஞ்ஞானம் நிறைந்தவளாகலாமா? இது சரியல்ல. நின்ன ஜன = உன் பக்தர்கள். இந்த தகாத (பயந்த) செயலைக் கண்டு, நகுதாரெ = சிரிக்கிறார்கள். இப்படியாக, சாதாரண மனிதர்களைப் போல பேசிக்கொண்டு, அண்ணி எங்கு போனாரோ என்று தேடி வியப்படைகிறார்கள் வந்தவர்கள். ஹத்யாவெ = ருத்ராக்ஷியை தரித்தவளைப் போல.

**அண்ணன மனெகெ பந்து சண்ண ஹொத்தயிது**
**அண்ணன மடதி பரலில்ல கோலெ |**
**அண்ணன மடதி பரலில்ல சத்யபா[4]மெ**
**இன்னு பா அப[4]யவ கொடுதேவெ கோலெ ||124**

சுபத்திரை மேலும் சொல்வது:
அண்ணன மனெகெ = அண்ணனான ஸ்ரீகிருஷ்ணனின் வீட்டிற்கு. சண்ண ஹொத்தாயிது = பொழுது சாய்ந்துவிட்டது. நம்மை வரவேற்பதற்கு அண்ணி வரவில்லை. சத்யபாமெ இன்னு பா = ஹே சத்யபாமா, நீயாவது வா. அபயவ கொடு தேவெ = நாங்கள் ஒன்றும் செய்யமாட்டோம். பயப்படாமல் தைரியமாக வா.

**தாயி மனெகெ பந்து பளக ஹொத்தாயிது**
**தாயி ஸொஸேரு பரலில்ல கோலெ |**
**தாயி ஸொஸேரு பரலில்ல நமக$^3$ஞ்சி**
**பா$^3$யி பி$^3$டு$^3$தாரெ ஒளகெல்ல கோலெ ||125**

சுபத்திரை மேலும் சொல்வது:
தாயி சொசேரு = தாய் தேவகிதேவி மற்றும் ருக்மிணி சத்ய பாமா ஆகிய மருமகள்கள். நமகஞ்சி பாயி பிடுதாரெ ஒள கெல்ல = இந்த அனைவரும் உள்ளேயே இருந்துகொண்டு (நமக்கும், நம்முடன் வந்தவர்களுக்கும்) செய்யவேண்டிய மரியாதையை எப்படி செய்வதோ என்று பயந்து, என்னென்னவோ பேசிக் கொண்டிருக்கலாம். (எதற்கு பயம்? லட்சுமி வாசம் செய்யும் இந்த இடத்தில், செல்வத்திற்கு குறைவா?)

**பந்த பீ$^3$கி$^3$த்திய ச$^1$ஞ்த$^3$தி$^3$ர்கொ$^3$ண்டு$^3$**
**மந்தஹாசதலி நுடிஸ்யாளெ கோலெ |**
**ச$^1$ந்த$^3$தி$^3$ர்கொ$^3$ண்டு$^3$ நுடிஸ்யாளெ ருக்மிணி**
**ப$^3$ந்த$^3$வளு யார மனெயவரு கோலெ ||126**

ருக்மிணிதேவி சொல்வது:
பந்த பீகத்திய = வந்திருக்கும் சம்பந்தி வீட்டு பெண்ணை. சந்ததி = மகிழ்ச்சியுடன். இதிர்கொண்டு = எதிர்கொண்டு. வந்த ருக்மிணி, ‘நீங்கள் யார்? யார் வீட்டுக்கு வந்திருக்கிறீர்கள்?’ என்று கேட்டார்.

**ஷுண்டா$^3$ல நக$^3$ரத$^3$ பாண்டுபூ$^4$ப$^1$ர ஸொஸெ**
**க$^3$ண்டுக$^3$லி பார்த்த$^2$னர்த்தா$^4$ங்கி$^3$ கோலெ |**
**கண்டுகலி பார்த்த$^2$னர்த்தா$^4$ங்கி$^3$ முய்யவ**
**கொண்டு ப$^3$ந்தளு திருகிஸி கோலெ ||127**

இது சுபத்திரையின் பதில்:
ஷுண்டால நகரத = கஜபுரத்தின் (ஹஸ்தினாபுரத்தின்). பாண்டு பூபர = தர்மராஜன் முதலான பாண்டவர்களின் தந்தையான

பாண்டுராஜனின் மருமகள் மற்றும். கண்டுகலி பார்த்தன ர்த்தாங்கி = மகா பராக்ரமியான அர்ஜுனனின் மனைவியான, சுபத்திரை (நான்). முய்யவ = பரிசுகள். கொண்டு பந்தளு = கொண்டு வந்திருக்கிறாள். திருகிஸி = பதில் பரிசுகளைக் கொடு.

இனி அடுத்து வரும் ஸ்லோகங்களில் சொல்லப்படும் ருக்மிணி சுபத்ரையின் பேச்சுவார்த்தையை, மக்களுக்காக நடத்திய ஒரு நாடகம் என்றே புரிந்து கொள்ளவேண்டும். மனிதர்களாக அவதரித்த தேவதைகள், தேவாம்சர்கள், மனிதர்களைப் போலவே நடந்து கொள்ள வேண்டும் என்பது நியதி.

**பாரவ்வ சுப[4]த்ரா ஏரவ்வ சோபான**
**தோரவ்வ நின்ன வசனவ கோலெ |**
**தோரவ்வ நின்ன வசனவ னெனுதலி**
**டோ[3]ர்யதகை[1]ய ஹிடிதளு கோலெ ||128**

ருக்மிணி பேசுவது:
ஹே சுபத்திரை, இங்கே வா, ஆசனத்தில் அமர். ஏரவ்வ சோபான = இந்த உயர்ந்த நாற்காலியில் ஏறி அமர். தோரவ்வ நின்ன வசனவ = என்ன விஷயம்? சொல். என்று கங்கணம் (டோர் என்னும் ஆபரணம்) அணிந்த சுபத்திரையின் கைகளைப் பிடித்தார் ருக்மிணி. (ஹரடி கங்கண டோர்ய ஹஸ்த கடக.. என்னும் பழைய கிருதிகளில் டோர்ய என்னும் ஆபரணத்தின் பெயர் வந்திருக்கிறது).

**ஓடிபந்தவளு ஔளகெ ஸேரிகொண்டு**
**நோடுவளெ நம்ம நுடிசுவளெ கோலெ |**
**நோடுவளெ நம்ம நுடிசுவளெ நம்மண்ண**
**மாடித மோஹ தலெகே[3]ரிது[1] கோலெ ||129**

சுபத்திரை பேசுவது:

ஔகெ சேரிகொண்டு = (இதுவரை) உள்ளே ஒளிந்திருந்து கொண்டு. (இப்போது) ஓடிவந்து நம்மைப் பார்க்கிறாள், பேசுகிறாள். நம்மண்ண மாடித மோஹ = என் அண்ணன் (அண்ணிக்கு) காட்டிய அன்பு. தலெகேரிது = ருக்மிணிக்கு தலைக்கு மேல் ஏறி (கர்வம்) அதிகமாகியிருக்கிறது -- என்கிறார் சுபத்திரை.

**அத்தெய மகளெந்து ஹத்தெண்டு தாளிதெ**
**உத்தர நிமகொந்து கொடுதேனெ கோலெ |**
**உத்தர நிமகொந்து கொடுதேனெ சுப⁴த்ரெ**
**சித்தக்கெ ஹோகி நெடுவந்தெ கோலெ ||130**

ருக்மிணி பேசுவது:
அத்தெய மகளெந்து = என் அத்தையின் மகள் என்று (கணவனின் தங்கை). ஹத்தெண்டு தாளிதெ = உன்னுடைய பற்பல கடும் சொற்களை பொறுத்துக் கொண்டேன். நிமகொந்து = உனக்கு. உத்தர கொடுதேனெ = பதிலைக் கொடுக்கிறேன். சித்தக்கெ ஹோகி = அதை உன் மனதில் வாங்கிக் கொள். நெடுவந்தெ = அம்பு மனதில் தைப்பதைப் போல இருக்கப் போகிறது (அதை பொறுத்துக் கொள்).

**ஓடிபந்தளெந்து ஆடிதரெனு திரு**
**காடிதரிஷ்டு ஹுருடில்ல கோலெ |**
**ஆடிதரிஷ்டு ஹுருடில்ல சுப⁴த்ரெ**
**நோடிகோ நின்ன மனதொளு கோலெ ||131**

ருக்மிணி பேசுவது:
ஓடிபந்தளெந்து ஆடிதரேனு = (உனக்கு பயந்து) ஓடி வந்தேன் என்று நீ எப்படி நினைக்கலாம்? திருகாடிதரிஷ்டு உருடில்ல = சாதாரணமாக பேசினாலும், உன்னைக் கண்டால் மனம் அப்படி யொன்றும் மகிழ்ச்சியடைவதில்லை. திருகி = உன் பேச்சுக்கு எதிராக, ஆடிதரெ = சரியான பதிலைக் கூறினால், அதுவும்

சரியாக இருப்பதில்லை. (நான் சொன்னது சரியா, தப்பா என்று நீயே) உன் மனதில் சரிபார்த்துக்கொள்.

**அண்ணன வஞ்சிஸி ஓடிபந்தவளென்ன**
**கண்ணிலி நோடி கரெயுவளெ கோலெ |**
**கண்ணிலி நோடி கரெயுவளு நம்ம**
**அண்ணன ப⁴லவ ஹிடிகொண்டு கோலெ ||132**

சுபத்திரை பேசுவது:
அண்ணன வஞ்சிஸி = ஸ்ரீகிருஷ்ணனை மயக்கி (திருமணத்திற்கு முன் காதல் கடிதம் எழுதி மயக்கி) ஓடி பந்தவளு = அவனுடன் ஓடி வந்தவள் நீ. என்ன = என்னை. கண்ணிலி நோடி கரெயுவளெ = (கர்வத்துடன், பேசாமல்) கண்ணால் மட்டுமே அழைக்கிறாய். இப்படியாக வெறும் முக பாவத்தினால் மட்டுமே அழைக்கும் ருக்மிணி நீ, என் அண்ணனான ஸ்ரீகிருஷ்ணனின் வலிமையை எண்ணி (இப்படி) நடந்துகொள்கிறாய்.

**அண்ணன வஞ்சிஸி ஓடிபந்தவளெந்து**
**என்ன நீ நுடிவெ சுப⁴த்ரெ கோலெ |**
**என்ன நீ நுடிவெ சுப⁴த்ரெ கேளு நா**
**சன்யாசியொடனெ பரலில்ல கோலெ ||133**

ருக்மிணி சொல்வது:
இப்படி சுபத்திரை கூறியதற்கு பதில் சொல்வதாக ருக்மிணி : என்னை நீ அழைத்தாய், (உன் அண்ணனை, திருமணத்திற்கு முன் காதல் கடிதம் எழுதி அவரை மயக்கியதாக) என்னை திட்டும் நீ, ஹே சுபத்திரை! கேள். உன்னைப் போல நான் ஒன்றும் சன்யாசியுடன் ஓடிவரவில்லை. (அர்ஜுனன் சன்யாசி வேடம் தரித்திருந்தபோது, அவனுடன் ஓடிப்போனவள் நீ) என்று ருக்மிணி பதிலளிக்கிறார்.

**கூலி தொட்டு நின்ன குலவன்னுத்தரிஸிதெ**
**ஏளலவாதெ சபெ$^{4}$யொளு கோலெ |**
**ஏளலவாதெ சபெ$^{4}$யோள் நம்மக்கன**
**கா$^{1}$லிகா$^{3}$தரு ஹோலீய கோலெ ||134**

சுபத்திரை சொல்வது:
உன் காதல் கடிதத்தை ஸ்ரீகிருஷ்ணனிடம் கொடுப்பதற்கு ஒரு ஏழை பிராமணனை நியமித்தாய். உன் தந்தையின் குலத்தை (ஸ்ரீகிருஷ்ணனிடம் ஏற்படுத்திக் கொண்ட சம்பந்தத்தினால்) மேம்படுத்தினாய். சபெயொளு = உன் திருமணத்திற்காக சபையில் வந்திருந்த சிசுபாலன் முதலான அரசகுமாரர்களை மற்றும் அரசர்களை (ஏமாற்றி). ஏளலவாதெ = இன்னொரு வருடன் ஓடிப்போனாய் என்னும் அவச்சொல்லுக்கு ஆளானாய். நம்மக்கன காலிகாதரு = (ஐந்து பேரை மணம் செய்து கொண்டாள் என்னும்) என் அக்கா திரௌபதியின் காலுக்காவது ஹோலீயா = நீ சரிசமமாவாயா?

(ஐந்து ஆண்களை) திருமணம் செய்துகொள்வதற்கு முன், பிற ஆணுடன் ஓடிப்போவது அவமானகரமான செயல் என்னும் குறிப்பு இங்கு சொல்லப்படுகிறது. திரௌபதியின் ஐந்து-கணவர்கள் செயல், அஞ்ஞானிகளின் கண்களுக்கு மட்டும் ஒரு கெட்ட செயலாக தோன்றுகிறது.

**ஒந்த$^{3}$னந்து$^{3}$ ஹன்னொந்தனெ ன்னிஸிகொண்டெ**
**குந்தி$^{3}$த$^{3}$வல்லெ நின்ப$^{3}$ண்ண கோலெ |**
**குந்தி$^{3}$த$^{3}$வல்லெ நின்ப$^{3}$ண்ண சுப$^{4}$த்ரெ**
**ப$^{3}$ந்தஹாதி$^{3}$ ஹிடிது$^{3}$ மனெகெஹோகு கோலெ ||135**

சுபத்திரை சொல்வது:
ஒந்தனந்து = (என் அண்ணன் காட்டிய அன்பு) உன் தலைக்கு ஏறிவிட்டது. ஹன்னொந்தனெ எனிஸிகொண்டெ = (அதனால்) அதை சுட்டிக்காட்டிய என் மேல் பல தகாத பேச்சுக்களை பேசினாய். நின்பண்ண குந்திதவல்லெ = உன் வண்ணம்

(எண்ணம்) புரிந்தது. சுபத்திரை இப்படி சொன்னதும், ‘ நீ வந்த வழியே, உன் வீட்டிற்கு திரும்பிப் போய்விடு’ என்று ருக்மிணி சுபத்திரையிடம் சொல்கிறார்.

**பாளோர மனெ முந்தெ ஏனோ கூட்யாட்தந்தெ**
**வீள்யவ கொட்டு ஏத[1]ரலி கோலெ |**
**வீள்யவ கொட்டு ஏத[1]ரலி ஹோயிஸிகொண்டெ**
**ஹேளதெ ஹோகி மனெதனக கோலெ ||136**

ருக்மிணி சொல்வது:
ருக்மிணி சுபத்திரையிடம் மறுபடி (திரும்பி அவள் வீட்டிற்கே போகுமாறு) அதையே சொல்கிறார். பாளோர மனெமுந்தெ = மரியாதைக்குரியவரின் வீட்டிற்கு வந்து. ஏனோ கூட்யாட்தந்தெ = நாய் வந்து கூக்குரலிட்டதைப் போல. வீள்யவ கொட்டு = வெற்றிலை பாக்கு வைத்து அழைத்து. ஏதரலி ஹோயிஸி கொண்டெ = கொம்பால் அடி வாங்கியதைப் போலானாய். ஹேளதெ ஹோகி = எதுவும் பேசாமல் (போய் வருகிறேன் என்றுகூட சொல்லாமல்) போய்விடு. மனெதனக = வீட்டிற்கு போய் சேரும்வரை திரும்பிப் பார்க்காதே. அப்படியே போய்விடு.

**ஆனெயஸங்கட ஆடு ஹுல்மெத்தரெ**
**ஆனெ ஹிங்கா[3]லலி ஒதெயதெ கோலெ |**
**ஆனெ ஹிங்கா[3]லலி ஒதெயதெ சுப[4]த்ரெ**
**ராணி ருக்மிணிகெ சரியேனே கோலெ ||137**

ருக்மிணி சொல்வது:
யானையுடன் ஆடு மேய்ந்தால், யானை ஆட்டினை தன் பின்னங்காலால் எத்தி உதைத்துவிடும். அவை இரண்டும் எப்படி சமமாகாதோ, அதைப் போலவே, ராணி ருக்மிணிக்கு சுபத்திரை எப்படி சமமாக முடியும்? (சமமில்லை என்று பொருள்). ராணி ருக்மிணி யானையைப் போல மிகப் பெரியவள். (கம்பீரம் போன்ற குணங்களால் மிக உத்தமள்).

சுபத்திரை ஆட்டினைப் போல (சிறிய பிராணியைப் போல) சிறியவள். சுபத்திரை, ருக்மிணிக்கு என்றும் சமம் அல்ல. ஸ்வரூப தாரதம்யத்தில்கூட இந்த இருவரில் குறிப்பிடத்தக்க வித்தியாசம் இருக்கிறது என்பது உண்மை. ஆனால் மக்களுக்காக, அண்ணி - நாத்தனாருக்கு நடுவே நடக்கும் சாதாரண தகராறினைப் போல, இந்த சம்பவம் விளக்கப்பட்டுள்ளது / கிருதி இயற்றப்பட்டுள்ள்து.

**குதுரெய சங்க3ட3 கு3ரி ஹுல்லு மெத்த3ரெ**
**குதுரெ ஹிங்காலிந் தொதெயதெ கோலெ |**
**குதுரெ ஹிங்காலிந் தொதெயதெ சுப4த்ரெ**
**சுத3தி1 ருக்மிணிகெ சரியேனே கோலெ ||138**

ருக்மிணி சொல்வது:
முந்தைய பத்யத்தின் பொருளையே மற்றொரு உதாரணத்துடன் இங்கு சொல்கிறார் தாசர். குதிரையுடன் செம்மறி ஆடு, புல் மேய்ந்தால், குதிரை தன் பின்னங்காலால் ஒரு எத்து எத்தி தள்ளிவிடும். அவை இரண்டும் சமமல்ல. அதுபோலவே, ஸ்ரீகிருஷ்ணனின் மனைவியான ருக்மிணிக்கு சுபத்திரை என்றும் சமமானவள் அல்ல என்று பொருள்.

சிறியவர்கள் பெரியவர்களின் நட்பைப் பெற்றதன்மூலம் மட்டுமே, அவர்கள் இருவரும் சமம் என்று எண்ணினால், அப்பெரியவர்கள் அவர்களை ஒதுக்குவதில் தப்பேயில்லை. நம்மிடையே வாழும் மக்களும் இப்படியே இருப்பார்கள் என்று இந்த பத்யத்திலிருந்து தெரிய வருகிறது.

கேலியாக பேசிக்கொள்வது, பெரும் சண்டையாக மாறிவிடக் கூடாது என்னும் நீதியை, வரும் 165 முதல் 200வது ஸ்லோகம் வரை விளக்கப்பட்டுள்ளது. தான் துடுக்காகப் பேசியதற்காக சுபத்திரை, மன்னிப்பு கேட்டு, ருக்மிணியின் பாதம் பணிகிறாள். ருக்மிணியும் அவளைப் பிடித்து எழுப்பி, புன்னகையுடன் குங்குமம் கொடுத்து உபசரிக்கிறார். இதே நீதி, பிறகு

ஸ்ரீகிருஷ்ணர் - அர்ஜுனர்களின் பேச்சுவார்த்தையின் மூலமாகவும் தெரிய வருகிறது.

**பீக$^{3}$ராடித ப$^{3}$லு பி$^{3}$ங்க$^{3}$த$^{3}$ நுடி கேளி**
**சாகரஷயன முரிதெ$^{3}$த்த$^{3}$ கோலெ |**
**சாகரஷயன முரிதெ$^{3}$த்த$^{3}$ அர்ஜுன**
**ஹேகிதெ நின்ன மனதொளு கோலெ ||139**

பீகராடித = சுபத்திரை, அர்ஜுனன் ஆகிய சம்பந்தியினர் பேசிய பேச்சினை. பிங்கத நுடி = கர்வத்துடன் பேசியதை. சாகரஷயன = பத்பனாப (ஸ்ரீகிருஷ்ண) முரிதெத்த = படுத்திருந்தவர் எழுந்து வந்தார் அல்லது சம்பந்திகளின் பேச்சுவார்த்தையில் தானும் கலந்து கொள்வதற்காக வந்தார்.

ஸ்ரீகிருஷ்ணர் கூறுவது:
"ஹே அர்ஜுனா! உன் மனதில் என்ன இருக்கிறது? ஏன் இப்படி பேசுகிறாய்? நீ மற்றும் சுபத்திரை பேசிய பேச்சுகள், உனக்கு சம்மதம்தானா?"

**ஹுச்சு கு$^{1}$ந்தி$^{3}$ன மாது$^{1}$ ஆடிதெ நீ கேளு**
**ஹுச்சாகி ஹோதி சபெ$^{4}$யொளகெ கோலெ |**
**ஹுச்சாகி ஹோதி சபெ$^{4}$யொளகென்னத்த**
**அச்யுதானந்தனு நுடிதனு கோலெ || 140**

ஸ்ரீகிருஷ்ணன் கூறுவது:
ஹுச்சுகுந்தின = பைத்தியத்தைப் போல உளறுவது. மாது ஆடிதே = நீ பேசியிருக்கிறாய். நீ கேளு = அறிந்து கொள். சபெயொளகெ = கற்றறிந்த பலரும் இருக்கும் சபையில் (நீ இப்படி பேசினால்), ஹுச்சாகி ஹோதி = உன்னை பைத்தியம் என்று நினைப்பார்கள். அச்யுதானந்த = ஸ்ரீகிருஷ்ணன் (தேச கால குணங்களால் அனைத்து இடங்களிலும் வியாப்தன் - இருப்பவன்). நுடிதனு = இவ்வாறு கூறினார்.

**ஏனேனோ அர்ஜுன ஈ நுடி நினகேகோ**
**நீனு நம்மவளு திருதிருகி கோலெ |**
**நீனு நம்மவளு திருதிருகி மாரிதரு**
**காணிய ஹொலவனரியரி கோலெ ||141**

ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது:
ஏனேனோ அர்ஜுனா = ஹே அர்ஜுனா! ஈ நுடி = இந்த பைத்தியக்காரத்தனமான பேச்சு. நினகேகோ = உன் தகுதிக்கு சரியல்ல. நீனு நம்மவளு = நீ மற்றும் நம்மவள் (சுபத்திரை அல்லது ருக்மிணி). திருதிருகி மாரிதரு = திரும்பத் திரும்ப பேசுகிறீர்கள். காணிய ஹொலவனரியரி = இதன் பொருள் இப்படியாக இருக்கிறது.

ரமாதி அனைத்து உலகமும் அனைத்து விதங்களிலும் எனக்குக் கீழ், எனக்கு கட்டுப்பட்டவையாகவே இருக்கிறது. என்னால் கொடுக்கப்படாத எந்தவொரு பொருளையும் யாரும் பெறுவதில்லை. அனைவரின் ஞானானந்த குணரூபவ சகல ஐஸ்வர்யங்களும் முழுமையாக என்னால் கொடுக்கப் பட்டவையே. எனக்கு கட்டுப்பட்டவையே. ”ஹே அர்ஜுனா! நீ மற்றும் உன்னைச் சேர்ந்தவர்கள், என் நட்பிற்கு கொஞ்சம்கூட அருகதையற்றவர்கள்” என்று இதன் பொருள்.

**ஆவுகா[1]வனிகெ[3] யாவாக[3] மூர்து[3]ட்டு[3]**
**பா[4]வ நினகொ[3]ம்மெ தொ[3]ரெத[1]ன கோலெ |**
**பா[4]வ நிமகொ[3]ம்மெ தொ[3]ரெத[1]ன உண்ட[1]ய்ய**
**நாவெ கொட்டேவு தக்கொள்ளி கோலெ ||142**

ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது:
ஆவுகாவனிகெ = மாடு மேய்ப்பவருக்கு. யாவாக = எப்போது. மூர்துட்டு = அல்ப பணமான மூன்று துட்டு சேர்ந்திருக்கிறது? (மூன்று துட்டு = 1 அணா = 1 ரூபாயில் 1/16 பங்கு). பாவ = ஹே அர்ஜுனா! நினகொம்மெ = உனக்கு ஒரு முறை (ஒரு காலத்தில்) தொரெதன = அரசாட்சி செய்யும் அதிகாரம்.

உண்டய்ய = கிடைக்கும். நாவே கொட்டேவு தக்கொள்ளி = நானே அதை உனக்குக் கொடுக்கிறேன். பெற்றுக்கொள் (பின்னர் மகாபாரதப் போரில் வெற்றி பெற்று, ஸ்ரீகிருஷ்ணன் மூலமாகவே, அர்ஜுனாதிகளுக்கு அரசாட்சி கிடைக்கிறது).

**த[3]னகா[3]வி நீனெத்த[1] வனஜ குசுமவெத்த**
**கனக கப்பி[3]ணகெ சரியுண்டே கோலெ |**
**கனக கப்பி[3]ணகெ சரியுண்டே அர்ஜுன**
**நினகெ சுப[4]த்ரெ சரியேனோ கோலெ ||143**

ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது:
தனகாவி நீனெத்த = மாடு மேய்க்கும் இடையனான நீ எங்கே? வனஜகுசுமவெத்த = தாமரை முகத்தை உடைய சுபத்திரை எங்கே? கனக = தங்கத்தைப் போல உயர்ந்தவளான சுபத்திரை. கப்பிணகெ = குறைந்த விலையுடைய இரும்பைப் போல இருக்கும் உனக்கு. சரியுண்டே = சரிசமம் ஆவாளோ?. தங்கம்-தாமரை உதாரணத்தைக் கொண்டு அர்ஜுனன், முதலில் ஸ்ரீகிருஷ்ணனிடம் பேசுகிறான். பின்னர், ஸ்ரீகிருஷ்ணன், அதே உதாரணத்தினால், அர்ஜுனனை, சுபத்திரையுடன் ஒப்பிட்டு இங்கு பேசுகிறார்.

**த[3]னகா[3]வியெந்தரெ எனகெ ஹீனதெயில்ல**
**ஜனரெல்ல பல்லரு ஈ மாது கோலெ |**
**ஜனரெல்ல பல்லரு ஈ மாது பா[4]வய்ய**
**நெனபு கொட்டில்லோ மரெதி[1]த்தெ[3] கோலெ ||144**

ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது:
'பாவய்யா = ஹே அர்ஜுனா! நீ என்னை, பசுக்களை மேய்ப்பவன் என்று கூறினால், அதனால் எனக்கு ஒன்றும் அவமானமில்லை. நான் கோபாலன் என்று அனைவருமே அறிவர். இப்போது கோபாலன் என்று சொல்லி, என்னுடைய மகிமையை எனக்கு நினைவுபடுத்தியிருக்கிறாய்'

**கோ³பா¹ல ஷப்தார்த்த நீ கேளு பாவய்ய**
**கோ¹பவின்யாகே என்மேலே கோலெ |**
**கோ¹பவின்யாகெ என்மேலே நின்மஹிமெ**
**நீ பே¹ளிகொ¹ண்டே நிஷ்கபட கோலெ ||145**

ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது:
'ஹே அர்ஜுனா! கோபால என்னும் சொல்லின் பொருளை (அதிலிருந்து தெரிந்து கொள்ளவேண்டிய என் மகிமைகளை) சொல்கிறேன், கேள். அதைக் கேட்டபிறகு, உனக்கு என் மேல் கோபம் வருவதற்கு எந்தவொரு காரணமும் இல்லை. இதனால் (கோபால என்பதற்கான சொல்லின் பொருளை அறிந்தபிறகு), என்னை கோபாலன் என்று அழைத்ததால். நிஷ்பகட = களங்கமில்லா மனதைக் கொண்ட அர்ஜுனனே. நின்மஹிமெ = உன் மகிமைகளை (என் உறவினன் என்பதால் உனக்கு வந்த பெரிய ஸ்தானத்தை), நீயே சொல்லிக் கொண்டதைப் போலாயிற்றே?'

**ஹெண்ணு கொட்டனு எனகெ கண்ணு காணதெ வனதி**
**இன்னெல்லி வரனு தொரெயதெ கோலெ |**
**இன்னெல்லி வரனு தொரெயதெ இரலிந்தா**
**வனிகெ கொட்டவ ஹெட்ட³னு கோலெ ||146**

ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது:
வனதி = வருணன் (சமுத்திரராஜன்), எனக்கு தன் மகளை (ஹெண்ணு=லட்சுமிதேவியை). திருமணம் செய்து கொடுத்தான். கண்ணுகாணதெ = என் குணங்ளைப் பற்றிய ஞானம் இல்லாமல் (குருடனாக). இன்னெல்லி வரனு தொரெயதெ = வேறெங்கும் நல்ல வரன் அவருக்குக் கிடைக்காததால், என்னிகெ கொட்டவ = அவளை எனக்கு திருமணம் செய்து கொடுத்தார். ஆகையால், அவரை மூர்க்கன் என்று சொல்லலாமா? (லட்சுமிதேவிக்கு ஸ்ரீஹரியே நியத-பதி என்று அறிந்தே, அவருக்கு திருமணம் செய்து கொடுத்தார் சமுத்திரராஜன் என்பது இங்கு இருக்கும் மறைபொருள்).

**கொட்டரேனாயிது இட்டா[1]ணெ இம்பி[3]ல்ல**
**ஹூட்டு க[3]தி[1]யந்து மொதலில்ல கோலெ |**
**ஹூட்டு க[3]தி[1]யந்து மொதலில்ல தானவ**
**கொட்ட ப[3]லீந்த்ரனித[3]கெ சாக்ஷி கோலெ ||147**

ஶ்ரீகிருஷ்ணன் சொல்வது:
கொட்டரேனாயிது = சமுத்ரராஜன், ஶ்ரீலட்சுமிதேவியை எனக்கு திருமணம் செய்து கொடுத்ததால், அதிலிருந்து எனக்கு என்ன பெருமை வந்தது? (லட்சுமிதேவி ஶ்ரீஹரியைக் கரம் பிடித்ததால், ஶ்ரீஹரியின் பெருமை / மகிமை கூடவோ குறையவோ இல்லை. அவர் ஸ்வபூர்ணன்). இட்டாணெ இம்பில்லா ஆணெ = சபதம் செய்கிறேன். எனக்கு எந்தவொரு உதவியும் கிடைக்கவில்லை. (ஸ்வதந்த்ரனான பரமாத்மனுக்கு எந்த உதவியும் தேவையில்லை. அவர் எப்போதும் எங்கேயும் பிறரின் உதவியை வேண்டாதவர்; தேவைப்படாதவர்).

ஹூட்டுகதியந்து மொதலில்ல = (நான்) பிறந்து வளர்வதற்கு எனக்கு பூமியில் கொஞ்சம்கூட இடமில்லை. தானவ கொட்ட = எனக்கு தானத்தைக் கொடுத்த. பலீந்திரனிதகெ சாக்ஷி = (மூன்று அடி நிலத்தை எனக்கு தானமாகக் கொடுத்த) பலி சக்ரவர்த்தியே நான் சொல்வதற்கு சாட்சி. அவனிடமே கேட்டுக் கொள்ளுங்கள்).

**குலவில்ல கோ[3]த்ரவில்ல நெலெயில்ல சாரவில்ல**
**ப[3]லுவைத்யரொளு ஹகெ[3]கா[3]ர கோலெ |**
**ப[3]லுவைத்யரொளு ஹகெ[3]கா[3]ரனிந்த[2]வனிகெ**
**ஜலதீஷ மகள கொடபஹுதெ கோலெ ||148**

ஶ்ரீகிருஷ்ணன் சொல்வது:
குலவில்ல கோத்ரவில்ல = (எனக்கு) குலம் இல்லை. கோத்திரம் இல்லை. (மூலரூபியான எனக்கு, நான் அவதாரம் செய்த யதுகுலம் போன்ற குலங்கள் கட்டுப்படுத்துவதே இல்லை. பிறப்பே இல்லாத எனக்கு குலம், கோத்திரங்கள்

இல்லை என்று வேதங்களே சொல்கின்றன). நெலெயில்ல = எல்லா இடங்களிலும் நிலைத்திருக்கும், ஸ்வதந்த்ரனான எனக்கு ஒரு நிலையான இடம் இல்லை. ஹகெகார = (பக்தர்களுக்கு எதிரிகள் ஆனதால்), தைத்யர்கள் எனக்கும் எதிரிகள் ஆயினர். அவர்கள் (பக்தர்களின் எதிரிகள், தைத்யர்கள்) எனக்கு காட்டும் த்வேஷத்தையே, திருப்பி அவர்களிடம் நான் காட்டுகிறேன்.

தைத்யர்களின் எதிரியான எனக்கு சமுத்திரராஜன், தன் மகளை (லட்சுமிதேவியை) கொடுப்பது சரியா?. லட்சுமிதேவியை எனக்குக் கொடுத்து, வருணன் தவறு செய்தான் அல்லவா, அர்ஜுனா?.

**பலுமந்தி ஸவதேரு மலமக்களென்போ³ரு**
**நெலெயில்லவீஜகத்ரயதொளு கோலெ |**
**நெலெயில்லவீஜகத்ரயதொளு நம்ம ஸ்ரீ**
**லலனெகெ தக்க வரனேனு கோலெ ||149**

ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது:
பலுமந்தி சவதேரு = ருக்மிணிக்கு ஆயிரத்துக்கும் மேற்பட்ட சக்களத்திகள் இருக்கின்றனர். (ஸ்ரீகிருஷ்ணன், ருக்மிணியைத் தவிர, சத்யபாமா, ஷண்மஹிஷியரான ஜாம்பவதி முதலான ஆறு பேரை மற்றும் நரகாசுரனிடமிருந்து மீட்ட 16,000 பேரையும் சேர்த்து, மொத்தம் 16,108 பேரை திருமணம் செய்திருக்கிறார். ருக்மிணியின் திருமணத்திற்கு முன்னரே நீலா ஆகியோர், பற்பல கோபிகா ஸ்த்ரீயர், ஸ்ரீகிருஷ்ணனுடன் சேர்ந்திருக்கின்றனர்).

மலமக்களு = அந்த சக்களத்தியரின் மக்கள். நெலெயில்ல = அவர்களின் எண்ணிக்கைக்கு அளவேயில்லை (பற்பல பேர்). 16,108 மனைவியருக்கும், ஒவ்வொருவருக்கும் 10 ஆண் மக்கள் + 1 பெண் என்று வாரிசுகள் உள்ளனர்.

ஜகத்ரயதொளு = இந்த மூன்று உலகங்களிலும். ஸ்ரீதேவிகெ = ருக்மிணிக்கு, நான் தகுந்த வரனா? (நிந்தாஸ்துதியைப் போல் உள்ளது இந்த ஸ்லோகம். என்னைத் தவிர அவளுக்கு, எப்போதும், எங்கேயும் வேறு கணவர்கள் கிடையாது என்பது இதன் பொருள்).

**சிக்கவனெம்பேனெ லெக்கவில்லத வ்ருத்த**
**ரொக்க ரூபாயிகளிவகில்ல கோலெ |**
**ரொக்க ரூபாயிகளிவகில்ல இந்த[2]வகெ**
**அக்கர ஹெண்ண கொடபஹுதெ கோலெ || 150**

ருக்மிணிக்கு ஸ்ரீகிருஷ்னன் (நான்) வயதில் சிறியவன் என்று சொல்லி, இந்த வரன் சரியில்லை என்று சொல்லிவிடலாமா? அல்லது வயதில் பொருத்தமானவன் என்பதால் திருமணத்திற்கு சரி எனலாமா? அவன் (ஸ்ரீகிருஷ்ணன்) எவ்வளவு வயதென்றே கண்டுபிடிக்க முடியாதவன் (அனாதி காலத்திலிருந்து இருப்பவன் ஆகையால்). புருஷோத்தமன் என்னும் சிறப்பைக் கொண்டவன் என்று பொருள்.

ரொக்க ரூபாயிகளு இவகில்ல = இவனிடம் (ஸ்ரீகிருஷ்ணனிடம்) எண்ணும் அளவிற்கு பணம் இல்லை. அபாரமான அனைத்து செல்வங்களையும் கொண்டவன் என்று மறைபொருள்.

இத்தகைய வயதானவனுக்கு (அல்லது பாலகனுக்கு), ஏழைக்கு, ருக்மிணியை மிகவும் ஆசையுடன், அன்புடன் திருமணம் செய்து கொடுப்பார்களா யாரும் (வருணன்)?. சகல ஐஸ்வர்ய ஸ்வாமியும், நித்ய நூதன சுந்தர வயதினனும் ஆன ஸ்ரீகிருஷ்ணனைத் தவிர ருக்மிணியை வேறு யாருக்குக் கொடுப்பது? என்பது இதன் பொருள்.

**குது[3]ரெ மொரெயவ உரிக[3]ண்ணின வரனிகெ**
**இதி[3]ரு ஹெண்ணிகாகி மன சோத கோலெ |**
**இதி[3]ரு ஹெண்ணிகாகி மனசோது கொட்ட மேலெ**
**ப[3]த[3]லு மாதாடி ப[2]லவேனு கோலெ ||151**

ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது:
குதுரெ மொரெயவ = குதிரை போன்ற முகத்தை உடையவன். உரிகண்ணின வரனிகெ = சிவந்த கண்களையுடைய வரனுக்கு (ஹயக்ரீவ ரூபனான ஸ்ரீகிருஷ்ணன், மிகுந்த கோபத்துடன் மது கைடபர்களைக் கொன்றான்). இதிரு ஹெண்ணிகாகி மனசோது = வருணன் (சமுத்திரராஜன்), ஸ்ரீகிருஷ்ணனின் மகளான கங்கையை, தன் மனைவியாக ஆக்கிக்கொள்ளும் ஆசையில் (பாகிரதி விஷ்ணுவின் பாதத்திலிருந்து வந்தவள்). தன் மகளான ஸ்ரீதேவியை (பாற்கடல் கடையும் காலத்தில் ஸ்ரீமகாலட்சுமி அதிலிருந்து தோன்றினார்) ஸ்ரீஹரிக்குக் கொடுத்து திருமணம் செய்தார். இப்படி இருக்கையில், இப்போது தனது மகளை ஒரு அயோக்ய வரனுக்குக் கொடுத்தேன் என்று சொல்ல முடியுமா? (முடியாது!).

**மகள கொட்டிஹனெந்து மமகாரதிந்தலி**
**சுகுணசமுத்ர உளுஹித கோலெ |**
**சுகுணசமுத்ர உளுஹித அஹிரோஷ**
**க[2]க[3]ராஜனிந்த கை[1]கா[3]ய்து[1] கோலெ ||152**

ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது:
1. மாப்பிள்ளை என்னும் நல்லெண்ணத்தில், சமுத்திரராஜன், பாற்கடலில் படுத்திருக்கும் ஸ்ரீகிருஷ்ணனை, மூழ்கடிக்காமல் பாதுகாக்கிறான்.
2. அஹிரோஷ = பாம்பின் கோபம். ககராஜனிந்த= பறவைகளின் தலைவனான கருடனால். கைகாய்து = காப்பாற்றப்பட்டது. கருடனைப் பார்த்து பயந்த, ஸ்ரீகிருஷ்ணனின் படுக்கையான சேஷன், தன் மேல் படுத்திருக்கும் ஸ்ரீகிருஷ்ணனை (பத்பனாபனை) பொறுத்துக்கொண்டு அமைதியாக இருக்கிறான்.

**ஹாருவ க[2]க[3]ராஜ ஹார்ஹாகி போகுவ**
**மூருதி கரவ நெக[3]ஹித கோலெ |**
**மூருதி கரவ நெக[3]ஹித காரண**
**ஹாருவ கருட கை[1]கா[3]ய்த[3] கோலெ ||153**

ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது:
ஹாருவ ககராஜ = பறந்து செல்லும் கருடன். ஹார்ஹாகி போகுவ = ஸ்ரீகிருஷ்ணனுக்கு மாலை அணிவித்து மரியாதை செலுத்தி, முன்னர் செல்லும். மூருதி = அந்த கருடனின் மூருத்தி (தேகம்), கரவ நெகஹித காரண = கை கூப்பிய காரணத்தால், கைகாய்த = (சேஷனிடமிருந்து ஸ்ரீகிருஷ்ணனை) காப்பாற்றினான். அல்லது மூர்த்தி என்பதற்கு பதிலாக மாருதி என்னும் பாட-பேதமும் இருக்கக்கூடும். மாருதி கரவ நெனஹித காரண = மாருதி தன் கையால் ஸ்ரீகிருஷ்ணனை வணங்கி, அவரது எதிரிகளை வெல்வதற்காக எப்போதும் கை தூக்கியவாறு இருப்பதனால், கருடன் பயந்து ஸ்ரீகிருஷ்ணனை சேஷனிடமிருந்து காப்பாற்றினான், என்றும் பொருள் கொள்ளலாம்.

**வாரிதியொளு மனெ ஹாவினமேல் நித்ரெ**
**ஹாருவ ஹத்தின ஏருவ கோலெ |**
**ஹாருவ ஹத்தின ஏருவெனெம்பந்த**
**தோர அஹங்கார நினகே[3]கெ[1] கோலெ ||154**

ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது:
வாரிதியொளு மனெ = கடலில் வீடு (இருப்பிடம்). ஹாவின மேல் நித்ரெ = பாம்பின் மேல் படுக்கை. ஹாருவ ஹத்தின = பறக்கும் கருடன் மேல். ஏருவ = (கருடனை) வாகனமாக வைத்துக் கொண்டிருக்கும் இவனே (அதாவது ஸ்ரீகிருஷ்ணன் சொல்வது, நானே). அஹங்கார தோர = கர்வம் இல்லாதவனாக இருக்கிறேன். நினகேகெ = (இந்த எந்த சிறப்புகளும் இல்லாத) உனக்கு ஏன் கர்வம்? அர்ஜுனா! (கர்வம் கொள்ளாதே - தன்னிலை அறிந்து பேசவேண்டும்).

**ஹாருவ ஹத்தி[3]ன ஏரி தி[1]ருகா[3]டுவாக[3]**
**ஜாரி பித்த[3]ரெ தெரனேனு கோலெ |**
**ஜாரி பித்த[3]ரெ தெரனேனு இவன பு[3]த்தி**
**யாரு பேள்வரு ஜகதொளகெ கோலெ ||155**

அர்ஜுனன் சொல்வது:
ஹாருவ ஹத்தின ஏரி = கருடன் மேல் ஏறி. திருகாடுவாக = சஞ்சரிக்கும்போது. ஜாரிபித்தரெ தெரனேனு = தவறி கீழே விழுந்தால், நம் கதி என்ன? (மனித புத்தியால், ஶ்ரீகிருஷ்ணனையும் ஒரு மனிதனாக நினைத்து, அந்த சந்தேகத்தில் பேசும் வார்த்தைகள் இவை).

**ப$^4$ரதி$^3$ந்த$^3$ நின்னெதெ$^3$ பி$^3$ரியலொத்தனு ரிஷி**
**துருள ஷிஷுபால சபெ$^4$யொளு கோலெ |**
**துருள ஷிசுபால சபெ$^4$யொளு பை$^3$த$^3$த்து$^3$**
**சிரிபந்து என்ன மனசிகெ கோலெ ||156**

அர்ஜுனன் சொல்வது:
அஞ்ஞானத்தினால், அர்ஜுனன், ஶ்ரீகிருஷ்ணனின் (அவர் நிர்தோஷி, குணபூர்ணனே ஆகியிருந்தாலும்) அவகுணங்களை, பல்வேறு உதாரணங்களுடன் இங்கு கூறுகிறான்.

பரதிந்த = வேகமாக. பிரியலொத்தனு = (இதயம்) உடையுமாறு காலால் எட்டி உதைத்தான். ரிஷி = ப்ருகுரிஷி. துருள சிசுபால= துஷ்ட சிசுபாலன். சபெயொளு = (தர்மராஜனின் ராஜசுய யாகத்தின்) சபையில், பைதத்து = (உன்னை பற்பல அவச் சொற்களால்) திட்டினான். சிரிபந்து என்ன மனசிகெ = (அப்படி திட்டியது) என் மனதிற்கு மிகவும் இதமாக இருந்தது.

யக்ஞ சபையில் கூடிய முனிவர்கள், சர்வோத்தமன் யார் என்பதை அறிவதற்கு ப்ருகு முனிகளை வேண்டினர். அவரும் பிரம்ம, சிவ மற்றும் விஷ்ணுவின் இருப்பிடங்களுக்குச் சென்று, அங்கு தனக்கு கிடைத்த அனுபவத்தினால், விஷ்ணுவே சர்வோத்தமன் என்பதை நிரூபித்தார். தன் இதயத்தில் எட்டி உதைத்த முனிவரை, விஷ்ணு, மரியாதை செலுத்தி, பாதபூஜை செய்து, அந்த பாதோதகத்தை தன் சிரசில் ஏந்தினார்.

அக்ரபூஜைக்கு யார் தகுந்தவர் என்று தர்மராஜன், பீஷ்மரைப் பார்த்து கேட்க, அவரும் ஶ்ரீகிருஷ்ணனே அதற்கு அருகதை

உள்ளவர் என்றார். அதற்கு சிசுபாலன் ஸ்ரீகிருஷ்ணனை பலவாறு திட்டியதற்கு, ஸ்ரீகிருஷ்ணன் தன்னுடைய சக்கரத்தால் அவனுடைய தலையைக் கொய்தார். .

**தா³னவாந்தகனெந்து பொகளோரு ஜகதொளு**
**காணதெ கண்ணு திளியதெ கோலெ |**
**காணதெ கண்ணு திளியதெ ஜனகளு**
**மான்ய குணங்களனரியதெ கோலெ ||157**

எதுவும் புரியாமல் மக்கள் ஸ்ரீகிருஷ்ணனை தானவாந்தகன் (துஷ்டர்களை கொல்பவன்) என்று புகழ்கின்றனர். மரியாதைக்குரிய நற்குணங்கள் எவை என்பதை அவர்கள் அறியாததால் அப்படி புகழ்கின்றனர். ஸ்ரீகிருஷ்ணனால் கொல்லப்பட்டவர்களில், பல அரிய நற்குணங்கள் நிரம்பியிருந்தன. தானவந்தகன் என்பதை ஒரு குணமாகப் பார்க்காமல் (அவரை நல்லவராகப் பார்க்காமல்), துஷ்டர்களான அசுரர்களில் நற்குணங்களைக் காண்பது - விபரீதஞானம் எனப்படும். (அஞ்ஞானிகளுக்கு உண்டாகும் இந்த தவறான ஞானத்தால், சஜ்ஜனர்கள் அவர்களிடமிருந்து தூர விலகியிருக்க வேண்டும் என்று இதிலிருந்து புரியவருகிறது).

**காலயவனனு க¹லஹ கொ¹ட³லி ப³ந்த³ரெ கிருஷ்ண**
**மொலெயலி ஹோகி அடகித கோலெ |**
**மொலெயலி ஹோகி அடகிதெ முசுகுந்த**
**நாலயதலி நின்ன உளுஹித கோலெ ||158**

காலயவனனு = ஸ்ரீகிருஷ்ணனைக் கொல்ல வேண்டும் என்று தீர்மானித்து, அசுராவேசத்துடன் கர்காசார்யரிடம் பிறந்தவன் காலயவனன் என்னும் அரசன். கலஹ கொடலி பந்தரெ = போருக்கு வந்தபோது. கிருஷ்ண = ஹே, கிருஷ்ணா!, வீர க்ஷத்ரியரைப் போல, அவனுடன் நேருக்கு நேர் போரிடாமல், மொலெயலி = முசுகுந்தன் படுத்திருந்த குகைக்குள். அடகிதெ= ஓடிப்போய் ஒளிந்துகொண்டாய். முசுகுந்த நாலயதலி =

முசுகுந்தன் தன் குகையில், தன் தவ வலிமையால் காலயவனனை, சுட்டுப் பொசுக்கி உன்னை காப்பாற்றினான்.

போரில் தேவதைகளுக்கு உதவிய முசுகுந்த ராஜனுக்கு, அவனின் விருப்பப்படி, அவனுக்கு நீண்ட தூக்கத்தைக் கொடுத்து, அந்த தூக்கத்தை யார் கெடுக்கிறார்களோ, முசுகுந்தன் அவர்களைப் பார்த்தவுடனேயே, அவர்கள் சுட்டுப் பொசுங்க வேண்டும் என்ற வரத்தையும் ஸ்ரீஹரி முசுகுந்தனுக்கு ஏற்கனவே வழங்கியிருந்தார். அதன்படியே, தற்போது கிருஷ்ணாவதாரத்தில் முசுகுந்தன் மூலமாக காலயவனனைக் கொன்று, முசுகுந்தனுக்கு சத்கதியை வழங்கினார் ஸ்ரீஹரி.

அர்ஜுனன், ஸ்ரீகிருஷ்ணனை திட்டுவதைப் போல இருந்தாலும், இதிலிருந்து ஸ்ரீகிருஷ்ணரின் மகிமைகளே நமக்குத் தெரியவருகிறது.

**பே[4]ரிபா[3]ரிஸி பரலு தீ[4]ர ஜரெய ஸுத[1]கெ[3]**
**மொரெ தோரதெ[3] கள்ளவேஷதி கோலெ |**
**மொரெ தோரதெ[3] கள்ளவேஷதி பந்தி[3]ரெ வீர**
**மூருதி ஜெயிஸி உளிஹித கோலெ ||159**

போர் முரசு சத்தத்தைக் கேட்டு வெளியில் வந்த ஜராசந்தன், மிகப்பெரிய வீரன். அவனுக்கு, கபட நாடகதாரிகளான நீங்கள் (ஸ்ரீகிருஷ்ணன் மற்றும் பீம, அர்ஜுனர்கள்) உங்கள் உண்மையான ஸ்வரூபத்தை காட்டவில்லை. அடுத்து, அவனுடன் போர் புரிய விரும்பினாய், கிருஷ்ணா. அவனோ, பீமனுடன் சண்டை போட விரும்பியபோது, பீமன், ஜராசந்தனை ஜெயித்து, கொன்று, உன்னைக் காப்பாற்றினான். அதற்கு முன்னர், ஜராசந்தன் தன் தண்டத்துடன் மதுராவிற்குப் போர் புரிய வந்தபோது, நீ ஓடி ஒளிந்துகொண்டது நினைவிருக்கிறதா? (இது அஞ்ஞானிகளின் சிந்தனை மட்டுமே).

பீமசேனரின் பெயரைச் சொல்லாமல், வீரமூருதி என்றதால், வாயுதேவரின் இரண்டாவது அவதாரமான பீமசேனரே வீரமூருதி. அவரைத் தவிர ஜீவர்களில் வேறு யாரும் வீரர்கள் இல்லை என்பதை உணர்த்தியிருக்கிறார் ஸ்ரீதாசர். ருத்ர தேவரிடம் பெற்ற வரத்தினால் யாராலும் ஜெயிக்க முடியாமல் இருந்த ஜராசந்தனைக் கொல்லும் திறன், விஷ்ணு பக்தனான (விஷ்ணு பக்தர்களில் சிறந்தவனான) பீமசேனனிடம் மட்டுமே இருக்கிறது என்பதை காட்டுவதே ஸ்ரீகிருஷ்ணனின் அபிப்பிராயம். பக்தனே இத்தகைய செயலை செய்யமுடியும் என்றால், அவனின் தலைவனுக்கு அந்த சாமர்த்தியம் கண்டிப்பாக உண்டு என்பதை உணர்த்துவதே இந்த நுடியின் நோக்கம்.

**நந்தனவனபொக்கு சுரதரு தருவாக**
**இந்த்ரனு பந்தி$^3$த்த$^3$ ஜகளக்கெ கோலெ |**
**இந்த்ரனு பந்தி$^3$த்த$^3$ ஜகளக்கெ நம்மக்க**
**நிந்த$^3$ நின்னபிமான உளியிது கோலெ ||160**

நரகாசுரனைக் கொன்றபிறகு, ஸ்ரீகிருஷ்ணன் ஸ்வர்க்கத்திற்குச் சென்று, அங்கு சத்யபாமாதேவியின் விருப்பப்படி நந்தவனத்தில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தபோது, தேவி, கல்பவ்ருக்ஷத்தை பூலோகத்தில் தனது அரண்மனைக்கு எடுத்துச் சென்று, அங்கு தன் முற்றத்தில் அதனை நட்டுவைக்கும் ஆசையை தெரிவித்தார். வேண்டாம் என்று ஸ்ரீகிருஷ்ணன் சொன்னாலும் அவர் கேட்காமல் அடம் பிடிக்க, ஸ்ரீகிருஷ்ணனும் அந்த மரத்தைப் பிடுங்கி கருடன் மேல் வைத்தார். இதனைக் கேள்விப்பட்ட இந்திரன் கோபம் கொண்டு, தன் ஆட்களுடன் ஸ்ரீகிருஷ்ணனை தடுத்து நிறுத்துவதற்கு வந்து போர் புரிந்தார். அப்போது சத்யபாமாதேவி, அவரே போருக்கு நின்று, அனைவரையும் தோற்கடித்தார்.

இந்த சம்பவத்தை தவறாகப் புரிந்துகொண்ட அர்ஜுனன், நம் அக்காவான (தாய்மாமனான வசுதேவனின் மருமகள் ஆனதால்,

அவரை அக்கா என்று அழைக்கிறார் அர்ஜுனன்) சத்ய பாமாவால் மட்டுமே ஸ்ரீகிருஷ்ணன் அந்தப் போரில் காப்பாற்றப்பட்டார் என்று சொல்லி, அதை ஸ்ரீகிருஷ்ணனின் அசாமர்த்தியம் என்று கூறுகிறான்.

ஆனால், ஸ்ரீகிருஷ்ணன் மற்றும் சத்யபாமாவின் இந்த நாடகமானது, கணவனின் பேச்சைக் கேட்காமல், மனைவி செயல்களை செய்தால் என்ன நடக்கும் என்று காட்டுவதற்காகவே நடத்தப்பட்டதாகும். மேலும், சத்யபாமா வானவர், ஜகன்மாதேயான சாக்ஷாத் மகாலட்சுமியின் ஸ்வரூபள் என்று அவரின் மகிமைகளைக் காட்டுகிறது. லட்சுமிபதியான ஸ்ரீகிருஷ்ணன் சர்வசக்தனான சர்வோத்தமன் என்றும் நிரூபிக்கிறது.

**அந்து துர்யோதன சபெ⁴யொளு கட்ட¹லு**
**அந்து நம்மிந்த உளிதெல்லொ கோலெ |**
**அந்து நம்மிந்த உளிதெல்லொ பா⁴வய்ய**
**அந்தின ப³வணெ மரெதேனோ கோலெ ||161**

அந்து = அன்று, நம் சார்பாக துரியோதனாதிகளிடம் சமாதானம் பேசுவதற்காக சென்ற நாளில், சபையில் உன்னை கயிற்றால் கட்ட முயன்றபோது, எங்களாலேயே காப்பாற்றப்பட்டாய் (பாண்டவர்களின் தூதன் என்பதாலேயே உன்னை கட்டாமல் விட்டார்கள்), கிருஷ்ணா! பவணெ = துக்கம். உண்மை என்னவெனில், அந்த சமயத்தில், ஸ்ரீகிருஷ்ணன தன்னுடைய விஸ்வரூபத்தைக் காட்டியதால், துரியோதனாதிகளின் அந்த துஷ்ட செயல் தோல்வியுற்றது. கண்ணில்லாத த்ருதராஷ்டிரன், ஸ்ரீகிருஷ்ணனின் அருளால் விஸ்வரூபத்தைக் கண்டு மகிழ்ந்தான். அனைத்து இடங்களிலும் வியாப்தனான ஸ்ரீகிருஷ்ணனை, அந்த கெட்டவர்கள் எப்படி கைது செய்யமுடியும்?

**ஜரெய சுதனிகஞ்செ மதுரெயொளிரதெ**
**ஹொரடோ1டி3தெ கோமந்தக கோலெ**
**கொ3ரதோ1டி3தெ3 கோமந்தகெ ஹிந்தெ ப1ட்ட1**
**க1ரக1ரெமனெல்ல மரெதெயெ கோலெ ||162**

ஜரெய சுதனிகெ = ஜராசந்தனுக்கு. அஞ்செ = பயந்து. மதுரா பட்டணத்திலிருந்து கோமந்தகத்திற்கு ஓடிப்போய், அங்கு மலையில் ஒளிந்துகொண்டு தப்பித்ததை மறந்து போனாயா, கிருஷ்ணா?. ஸ்ரீகிருஷ்ணன் மற்றும் பலராமன், கோமந்தக மலையில் இருந்தபோது, தன் பெரிய படையினருடன் அங்கு வந்த ஜராசந்தன், அந்த மலை முழுவதற்கும் நெருப்பு வைத்தான். மலை உச்சியிலிருந்து, அந்தப் படையினரின் நடுவில் குதித்த கிருஷ்ணன் (மற்றும் பலராமன்), அனைவருடனும் போரிட்டுக் கொன்றனர். இதனால் அவமானப்பட்ட ஜராசந்தன், ஸ்ரீகிருஷ்ணனிடமிருந்து தப்பி ஓடிப்போனான். கோமந்தக மலைக்கு ஸ்ரீகிருஷ்ணன் சென்றது, ஸ்ருகால வாசுதேவனைக் கொல்வதற்கே. ஜராசந்தனைத் துரத்தியபிறகு, அந்த வேலையை செய்து முடித்தார்.

**இதி3ராகி3 இத்து3 கா1தி3 ஒப்பரனாதரு**
**மது4வைரி நீனு கெ3லலில்ல கோலெ |**
**மது4வைரி நீனு கெ3லலில்ல சர்வர**
**ஸதெ3தெ3 மார்மலசி வஞ்சிஸி கோலெ ||163**

எதிரிக்கு எதிர் நின்று போரிட்டு இதுவரை யாரொருவரையும் வென்றதில்லை. மதுவைரி - ஹே கிருஷ்ணா! நீ அனைத்து எதிரிகளையும், மர்மத்துடன், தந்திரத்துடனேயே வென்றி ருக்கிறாய் (கொன்றிருக்கிறாய்). (உண்மை நிலை என்ன வெனில், ஸ்ரீகிருஷ்ணன் அனைவரையும் எதிர்கொண்டே வென்றிருக்கிறார். சில சமங்களில் தந்திரத்திலும் வென்றிருக்கிறார். 'நிக்ருத்யா நிக்ருதிம் ஹன்யாத்' என்னும் சாஸ்திர வாக்கியத்திற்கேற்ப, வஞ்சகர்களை வஞ்சகத்தின் மூலமாகவே வெல்ல வேண்டும் என்னும் விதியை

அனுசரித்து, அந்த எதிரிகளுக்கு மரணம் கூட தர்ம மார்க்கத்தில் ஆகக்கூடாது (அப்படி ஆகி, அவர்கள் உத்தம லோகத்தை அடையக்கூடாது என்பதால்) என்றே அப்படி வென்றிருக்கிறார் ஸ்ரீகிருஷ்ணன்.

**மூரு குணங்கள மீரிதவனிவ**
**மூரு மனெ சஞ்சியெனிஸுவ கோலெ**
**மூரு மனெ சஞ்சியெனிஸுவனிவன மஹிமெ**
**யாரு ப³ல்லரு ஜக³தொளு கோலெ ||164**

மூரு குணங்கள = உத்தம, மத்யம மற்றும் அதம என்னும் மூன்று குணங்களை, மீரிதவ = அவற்றை மீறியவன் (அவற்றில் எந்த ஒன்றிலும் சேராதவன்). மூரு மனெ சஞ்சியு = பற்பல வீடுகளில் சாதாரணமாக புகுந்து வருபவன். (இத்தகைய நிந்தா ஸ்துதியின் பின்னால் இருக்கும் உண்மையான பொருள் என்னவெனில்: சத்வ, ரஜஸ், தமஸ் ஆகிய ப்ராக்ருத மூன்று குணங்களிலிருந்து தூரவிருப்பவன். சச்சிதானந்தரூபன். வைகுண்ட, அனந்தாஸன, ஸ்வேதத்வீப என்னும் தன்னுடைய மூன்று இடங்களிலும் எப்போதும் நிலைத்திருப்பவன்.

**க்ஷீரசாகரஷயன எந்தரெ ஹிக்கு³வி**
**யாரு அரியரெ நின்ன ஹுளுகு¹ கோலெ |**
**யாரு அரியரெ நின்ன ஹுளுகு¹ அத்தெய மனெய**
**ஸேரி இத்து³த³னரியரெ கோலெ ||165**

பாற்கடலில் வசிப்பவனே! என்று உன்னை அழைத்தால், நீ மகிழ்வாய். நின்ன ஹுளுகு = உன் மகிழ்வுக்குக் காரணம் என்னவென்று. யாரு அரியரெ = யாருக்குத் தெரியும்? அத்தெனய் மனெய சேரி = உன் அத்தையின் வீட்டில் நீ வசிப்பதாலேயே அந்த மகிழ்ச்சி என்று யாருக்குத் தெரியும்? (அனைவரும் அறிவர்).

பாற்கடலில் வசிப்பவன் என்று பக்தர்கள் தன்னை அழைத்தால், ஸ்ரீஹரிக்கு மகிழ்ச்சி உண்டாகிறது. பாற்கடலில் நடுவில்

இருக்கும், ஸ்வேதத்வீபத்திற்கு வரும் முக்தர்களுக்கு, ஆனந்தத்தைத் தரும் தன் மகிமைகளை அறிந்திருக்கிறார்கள் என்று, அப்படி அழைத்தவர்களுக்கு தரிசனம் கொடுக்கிறார் என்று பொருள். நித்யானந்தஸ்வரூபனே ஆன அவனுக்கு அத்தை வீட்டில் இருப்பதாலா மகிழ்ச்சி வரும்? இல்லவே இல்லை.

**பாலு மொசரு க[1]த்து[3] பா[3]லேரெல்லர கெ[1]டி[3]ஸி**
**கா[1]லு ஒரளிகெ[3] கட்டிஸிகொண்டெ கோலெ |**
**காலு ஒரளிகெ கட்டிஸி கொண்டத்து[3]**
**பூ[4]லோகதல்லி மரெதேனெ கோலெ ||166**

திருட்டு, பிற பெண்களை மணம் புரிந்தது, கட்டிப் போடப்படுதல் ஆகிய தோஷங்கள் கிருஷ்ணனிடம் காணப்படுகின்றன. மரெதேனெ = இவற்றை நான் மறப்பேனா? (மறக்கவே மாட்டேன்). அனைவருக்கும் தலைவனான ஸ்ரீகிருஷ்னன், பிறரின் பொருட்களை திருடிக்கொள்கிறான் என்றால் அது எப்படி சாத்தியம்? அனைவருக்கும், அனைத்திற்கும் தலைவனான பிறகு, அனைத்தும் இவனுடையதே ஆகும். இவனைத் தவிர எதுவும் வேறு யாருடையதாகும்? தன்னுடைய பாலலீலைகளால், நந்தகோப, யசோதை ஆகியோரை மகிழ்விப்பதும், தன் மகிமைகளை காட்டிக்கொள்வதுமே அவனுடைய முக்கிய நோக்கமாகும்.

லட்சுமிதேவியின் சன்னிதானத்துடன், ஸ்ரீகிருஷ்ணனுடன் சேர்வதற்கு அருகதை உள்ள ஸ்த்ரீயர் மட்டுமே, தாங்கள் பெற்ற வரத்தினால், அவனுடன் சேர்ந்தனர். 10 வயதான சிறுவன், அவர்களுடன் சேர்ந்து, அவர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறான் என்பது மிகவும் அற்புதமான மனிதர்களுக்கு அப்பாற்பட்ட மகிமையல்லவா? யசோதையால் உரலில் கட்டப்பட்டு, அர்ஜுன மரங்களுக்கு நடுவில் சிக்கிக்கொண்டு, அவற்றை சாய்த்து, தாங்கள் பெற்றிருந்த சாபத்தினால் மரங்களின் ரூபங்களில் இருந்த நளகூபர், மணிக்ரீவர் என்னும்

குபேரனின் மக்களுக்கு சாபவிமோசனம் கொடுத்து அவர்களை காப்பாற்றியதைப் பற்றி அறியாத அஞ்ஞானிகள் மட்டுமே, ஸ்ரீகிருஷ்ணன் உரலால் கட்டப்பட்டான் என்று சொல்லிக் கொண்டிருப்பர்.

**பெண்ணெ மொசரு கத்து[3] கன்யெரெல்லர கெ[1]டி[3]ஸி**
**முன்னெ தொ[1]த்தி[1]ன மனெயல்லி கோலெ |**
**முன்னெ தொ[1]த்தி[1]ன மனெயல்லி உண்டு ஹிந்தெ**
**ஹெணாகி[3]த்து[3] மரெதே[1]னே[1] கோலெ ||167**

இந்த நுடியில் ஸ்ரீகிருஷ்ணனின் மேல் சொல்லப்பட்டிருக்கும் குற்றங்கள் என்னவென்றால்:

1. கோபியர்களின் வீட்டிற்குள் சென்று, வெண்ணெய், தயிர் இவற்றை திருடியது.
2. கோபகன்யைகளுடன் சேர்ந்தது
3. தாசியின் வீட்டில் தின்றது
4. முன்னொரு காலத்தில், பெண்ணாகப் பிறந்தது (சாபத்தின் காரணமாக புருஷர்களுக்கு ஸ்த்ரி ஜென்மம் வருகிறது).

இந்த நிந்தா ஸ்துதி போன்ற செயல்களால், சஜ்ஜனர்கள் அறியவரும் மகிமைகள்:

1. வெண்ணெய் போன்ற வஸ்துகளை, கோபியர்களிடமிருந்து பெற்று, அதற்கு ஈடாக அவர்களுக்கு அருளியது. இதுவே பக்தர்களுக்கு அருளும் முறை.
2. காத்யாயனி விரதத்தினால், கௌரி தேவியின் பிரசாதத்தினால், ஸ்ரீகிருஷ்ணனை அடைவதற்கு (முன்னர் பெற்றிருந்த வரத்தினால்) அருகதை பெற்ற கோபி கன்யைகள், ஸ்ரீகிருஷ்ணனை அடைந்தனர். அவர்களை மனைவியராக ஏற்று, அவர்களுக்கு அருளினார் ஸ்ரீகிருஷ்ணர்.
3. தாசியான குப்ஜெயின் வீட்டில் உண்டு, அவளை தன்னை அடையுமாறு அருளி, அவளால், (நாரதரின் சிஷ்யனும், பீமசேனரின் சாரதியுமான) விஷோகன் என்னும் மகனைப் பெற்றார். ரமா ஆவேசம் பெற்றிருந்த குப்ஜை, பகவந்தனை

அடைவதற்கு அருகதை பெற்ற அப்சரா ஸ்த்ரீயர்களில் ஒருவள். முந்தைய பிறவியில், பிங்காளா என்னும் பெயரில் தாசியாக இருந்து, விரக்தளாக, தனது அந்தர்யாமியான ஸ்ரீஹரியே தனக்கு ரமணனாகவேண்டும் என்று நினைத்தவாறு உடலை தியாகம் செய்தாள்.

4. புருஷரூபங்களைப் போல, ஸ்ரீஹரிக்கு அனேக ஸ்த்ரீ ரூபங்களும் இருக்கின்றன. அவை அனைத்தும், ஞானானந்தாத்மமானவையே. சாபத்தினால் வந்த ஸ்த்ரீ ரூபம் என்று அவருக்கு எந்த ரூபமும் இல்லை. அவருக்கு ப்ராக்ருத தேகமே இல்லை. மோகினி ரூபத்தினால் அவதரித்து, தைத்யர்களை மோகம் கொள்ளச் செய்து, தேவதைகளுக்கு அமிர்தத்தை பகிர்ந்தளித்த ரூபத்தை நினைத்து மகிழ்கின்றனர் சஜ்ஜனர்கள்.

**அபா$^{1}$ர நாரேர ஒகெ$^{3}$த$^{1}$னகெ$^{1}$ நீர்தி$^{1}$த்தி$^{3}$**
**வ்யாபார பஹள நடெஸிதெ கோலெ |**
**வ்யாபார பஹள நடெஸிதெ ஸ்ரீகிருஷ்ண**
**அபார மஹிமெகெ நமோ எம்பெ கோலெ ||168**

அபார நாரேர = அனேக எண்ணிக்கையிலான கோபிகா ஸ்த்ரீயரின். ஒகெதனக = வாழ்க்கைக்கு (அவர்கள் அனைவரும் ஏற்கனவே திருமணம் ஆனவர்களாகையால், அவர்களின் தர்மத்தை கெடுத்தான் என்னும் அவச்சொல்). நீர்தித்தி = கெடுத்து. அபாரமஹிமெகெ = இவ்விதமான அபார மகிமைகளை உடைய உனக்கு. நமோ எம்பெ = வணங்குவேன் (கேலியாக சொல்வதைப் போல உள்ளது).

ஸ்ரீகிருஷ்ணன் யாராலும் அடையப்பட முடியாதவன் ஆனாலும், கோப ஸ்த்ரீகளுடன் விளையாடி, அவர்களுக்கு அபார மகிழ்ச்சியைக் கொடுத்த அபார மகிமனே ஆவார். இங்கு ஸ்ரீகிருஷ்ணனுக்கோ, அந்த பெண்களுக்கோ எந்தவித தோஷங்களும் வரவில்லை. கோபியர், தங்கள் கணவன், மக்கள் ஆகியோரை துறந்து வந்து, ஸ்ரீகிருஷ்ணரிடம் காம நிமித்தமான

மகா பக்தியுள்ள பெண்கள். அவர்கள் அனைவரின் பதிகளின் அந்தர்யாமியானவன் ஸ்ரீகிருஷ்ணனே. அந்தப் பெண்கள், தங்களின் பதி- அந்தர்கத பரமாத்மனையே வணங்கும் சிந்தனையைக் கொண்டிருந்ததால், பதிவிரதை என்று அழைக்கப்பட்டனர். அந்த அனைவரின் பதி- அந்தர்கதனே ஸ்ரீகிருஷ்ணன். ராசக்கிரீடையில், ஒவ்வொரு கோபியரின் பக்கத்திலும் ஒரு கிருஷ்ண ரூபம் இருந்தது. இத்தகைய கிருஷ்ணனின் லீலைகள் பாகவதத்தில் விளக்கப்பட்டிருக்கின்றன.

**ஸ்வரமண னெந்தெந்து சுகிசுத்த ஹெத்தெய்வ**
**க$^1$ரடி$^3$மகள தந்து$^3$ மதுவ்யாதெ கோலெ |**
**க$^1$ரடி$^3$மகள தந்து$^3$ மதுவ்யாதெ சஞ்சுத்தி$^1$**
**யோடகூ$^3$டி$^3$ அவள நெரெவரெ கோலெ ||169**

ஸ்வரமணனெந்தெந்து = உன்னுடைய மகிழ்ச்சிக்கு பிற பொருட்கள் எவையும் அல்லது பிறர் யாரும் தேவைப்படுவதில்லை என்னும் புகழ்ச்சியால். சுகிசுத்த = மகிழ்ந்திருக்கும். ஹெத்தெய்வ = அனைவராலும் வணங்கப்படும் மகாதேவன் என்னும் ஸ்ரீகிருஷ்ணனே. கரடிமகள = ஜாம்பவந்தனின் மகளான ஜாம்பவதியை (ஏன்), மதுவ்யாதெ = திருமணம் செய்துகொண்டாய்? சஞ்சுத்தியொடகூடி = அத்தகையவளுடன். நெரெவரெ = யாரும் சேருவரோ?. எவ்வளவு அவமானம்?

ஜாம்பவதிதேவி, ஸ்ரீகிருஷ்ணனின் ஷண்மஹிஷியரில் மூத்தவள். அனைவரைவிட அதிகமான லட்சுமி ஆவேசம் உள்ளவள். தாரதம்யத்தில், கருடசேஷ ருத்ரர்களின் மனைவியரான சௌபர்ணி, வாருணி, பார்வதிகளைவிட உத்தமள். த்ரேதாயுகத்தில் ஸ்ரீராமனின் சேவைக்காகப் அவதரித்து, பிரம்மனின் ஆவேசம் கொண்ட ஜாம்பவந்தன், பின்னர் வரும் த்வாபர யுகத்தில், தன் மகளான ஜாம்பவதியை ஸ்யமந்தமணியுடன் ஸ்ரீகிருஷ்ணனுக்கு சமர்ப்பித்து

மகிழ்ந்தான். கரடியின் வம்சத்தில் பிறந்திருந்ததால், ஜாம்பவதியை கரடி மகள் என்று அழைத்து, ஸ்ரீகிருஷ்ணனை கேலி செய்யும் பேச்சு இது.

**நாருவ மைய்யவ நீரொளக[3]டகி[3]ஹ**
**மோரெ ஹந்தி[3]யவ ப[3]லுகோ[1]பி[1] கோலெ |**
**மோரெ ஹந்தி[3]யவ ப[3]லுகோ[1]பி[1] தி[1]ருதி[1]ம்ப[3]**
**ஹாருவன கொ[3]ட[3]வெ நமகே[3]கெ[1] கோலெ ||170**

இந்த நுடியிலிருந்து தொடங்கி, ஸ்ரீஹரியின் தசாவதாரங்களில் அஞ்ஞானிகளுக்குத் தோஷங்களாக தெரியும் விஷயங்களை சொல்லி, ஸ்ரீகிருஷ்ணனின் சர்வோத்தமத்வத்தை கேள்வி கேட்கிறான் அர்ஜுனன். நாருவ மெய்யவ = துர் நாற்றம் கொண்ட தேகத்தைக் கொண்ட மத்ஸ்யன். நீரொளகடகிஹ = எப்போதும் தண்ணீரிலேயே இருக்கும் (தன் உடல் உறுப்புகள் அனைத்தையும் ஒரு சிப்பியில் அடைத்திருக்கும்) கூர்மன். மோரெ ஹந்தியவ = பன்றியின் முகத்தைக் கொண்ட வராகன். பலுகோபி = பயங்கரமான கோபத்துடன் வெளிப்பட்டு, ஹிரண்யகசிபுவைக் கொன்ற நரசிம்மன் (லட்சுமிதேவியின் சமாதானத்திற்கும் இரங்காமல், பக்த பிரகலாதனின் வேண்டுகோளுக்கு இணங்கி சமாதானம் அடைந்தவன்). திருதிம்ப ஹாருவ = பிக்ஷையைப் பெற்று வாழும் பிராமணன் (பலியிடம் மூன்றடி நிலம் தானமாகக் கேட்ட) வாமனன்.

இந்த அவதாரங்கள், மூல நாராயணனிடமிருந்து வேறுபடாமல், தோஷங்கள் இல்லாமல், கல்யாண குணபூர்ணமானவை. இந்த அவதாரங்கள் செய்த காரியங்கள், பாகவதாதி புராணங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. மத்ஸ்ய ரூபத்தினால் வேதங்களை அபகரித்த ஹயக்ரீவாசுரனின் கதை. கூர்ம ரூபத்தினால், அமிர்தத்திற்காக தேவ-தைத்யர்கள் பாற்கடலை கடைந்தபோது, மந்தர மலையை தன் முதுகின் மேல் தாங்கி, கடலைக் கடையும் வேலையை முடித்துக் கொடுத்தது வராக ரூபத்தினால், ஆதிதைத்ய ஹிரண்யாக்ஷகனைக் கொன்று,

பிரளய நீரிலிருந்து பூமியைக் காப்பாற்றி மேலெடுத்து வந்து நிறுவி சதுர்முக பிரம்மனுக்கு அருளியது. நரசிம்ம ரூபத்தினால், கம்பத்திலிருந்து தோன்றி, ஹிரண்யகசிபுவைக் கொன்று, பக்தபிரகலாதனுக்கு அருளினான். வாமன ரூபத்தினால், ஸ்வர்க்கத்தை அடைய விரும்பிய தைத்ய சக்ரவர்த்தி பலியை வென்று, ஸ்வர்க்க லோகத்தை இந்திரனுக்கு திருப்பி அளித்தான். பலிக்கு சுதள லோகத்தின் அதிபத்யத்தையும், அடுத்த பிறவியில் இந்திர பதவியையும் கொடுத்து அருளியவர் ஸ்ரீஹரி.

**கோடலி பிடிது தன்ன படெ3த3 மாதெ1ய கொ1ந்து3**
**கட3ல ப3ந்தி4ஸி மட3தி3ய கோலெ |**
**கட3ல ப3ந்தி4ஸி மட3தி3ய கொண்டு3 ப3ந்து**
**அடவி கட்டித மஹாமஹிம கோலெ ||171**

கோடலியால் பெற்ற தாயையே கொன்ற பரசுராமன். கடல பந்திஸி = கடலின் மேல் பாலம் கட்டி, கபி சைன்யத்துடன் இலங்கைக்கு சென்று ராவண கும்பகர்ணாதிகளைக் கொன்று சீதையை (மடதிய கொண்டு பந்து), அழைத்து வந்து, (அவளின் பதிவிரதத்தை சந்தேகித்த துஷ்டர்களின் பேச்சைக் கேட்டு) அவளை, திரும்பி காட்டிற்கு அனுப்பிய ஸ்ரீராமன் நீதானே? நீ பெரும் மகிமைகளைக் கொண்டவனா?

தந்தையான ஜமதக்னி முனிவரின் சொல்லைக் காப்பாற்றுவதற்காக, தாயான ரேணுகாதேவியை பரசுராமர் கொன்று, அதனால் திருப்தியடைந்த தந்தை கொடுத்த வரத்தினால், தன் தாயை மறுபடி உயிர் பிழைக்கச்செய்தார். தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை என்னும் விஷயத்தை உலகத்திற்கு எடுத்துக்காட்டி, துஷ்ட க்ஷத்ரிய அரசர்களை நிர்மூலம் செய்து, தர்மத்தை காப்பாற்றியவர் ஸ்ரீபரசுராமர்.

ஸ்ரீராமர், சீதையை காட்டிற்கு அனுப்பியது, யாரோ ஒருவரின் பேச்சைக் கேட்டு, அவளின் பதிவிரதத்தின் மேல் சந்தேகப்பட்டு

அல்ல. சுராணகர் என்னும் தைத்யரை தமஸ்ஸிற்கு அனுப்புவதற்காக நடத்தப்பட்ட நாடகம் அது. நிர்தோஷியும் லட்சுமிதேவியின் அவதாரமும் ஆன சீதாதேவியை திட்டி, தம்பதிகளின் பிரிவிற்கு அதையே காரணமாக காட்டி, அதன் மூலம் சுராணகருக்கு தண்டனை கொடுத்தார். ஸ்ரீராமனின் விஷயத்தில் எவ்வித தோஷங்களும் இல்லை. அதற்கு ஆதாரங்களும் இல்லை.

**ஜார சோரனெந்து ஜகதொளு பெஸராத**
**அபாரவாகித்த வனிதேர கோலெ |**
**அபாரவாகித்த கோபேர ப$^{1}$ல்மொஸர**
**சோரதனதல்லி கெடிஸிதெ கோலெ ||172**

பால், தயிர்களை திருடி திருடன் என்று பெயர் பெற்று, பற்பல கோபிகா ஸ்த்ரீயர்களை கெடுத்து, பெண்பித்தன் என்று பெயர் பெற்ற விஷயங்கள் இங்கு நிந்தா ஸ்துதியாக சொல்லப் பட்டிருக்கின்றன. இதிலிருந்து ஸ்ரீகிருஷ்ண அவதாரத்தின் மகிமை விளக்கப்பட்டிருக்கிறது.

**ப$^{4}$ண்டனந்ததலி ப$^{3}$த்த$^{1}$லெ திருகு$^{3}$த்த$^{1}$**
**பு$^{1}$ண்டு$^{3}$கா$^{3}$ரனந்தெ ஹயவேரி கோலெ |**
**பு$^{1}$ண்டு$^{3}$கா$^{3}$ரனந்தெ ஹயவேரி ஹெஸத**
**லண்ட$^{3}$ர கொ$^{3}$ட$^{3}$வெ நமகே$^{3}$கெ$^{1}$ கோலெ ||173**

பண்டனந்ததலி = வெட்கமில்லாமல். பத்தலெ திருகுத்த = நிர்வாணமாக சுற்றிவந்த (புத்தாவதாரம்). புண்டுகாரனந்தெ = எவ்வித நீதி நியமங்கள் இல்லாத போக்கிரியைப் போல இஷ்டத்திற்கு பலரைக் கொன்று, பூமியை சுற்றி வந்து, குதிரையில் ஏறி வந்த கல்கி ரூபம். ஹெஸத லண்டர கொடவெ = எந்தவொரு கெட்ட செயலையும் செய்வதற்கு பயப்படாதவர்கள் / வெட்கப்படாதவர்கள் (அவர்களுடனான நட்பு). நமகேகெ = நமக்கு எதற்கு?.

வேதசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும் நல்மார்க்கத்தைப் பிடித்து, தமக்கு சிறிதும் அருகதையில்லாத சத்கதியைப் பிடிப்பதற்கு முயன்று கொண்டிருந்த அசுர ராஜர்களை, அந்த மார்க்கத்திலிருந்து திருப்ப, வேதாதிகளில் தவறான அபிப்பிராயங்களை உண்டு பண்ணுவதற்கு, பிரம்மாதிகளால் வணங்கப்பட்டு, ஸ்ரீஹரி எடுத்த அவதாரமே பௌத்த அவதாரம்.

கலியுகத்தின் இறுதி பாகத்தில் அனைத்து தர்மங்களும் அழிந்து, ராஜர்கள் என்ன செய்வதென்று தெரியாமல் சுற்றிக்கொண்டிருக்க, அவ்வேளையில் ஸ்ரீஹரி ஷம்பல கிராமத்தில் ‘விஷ்ணுயஷ’ என்னும் பிராமணரிடம் ‘கல்கி’ நாமகனாக அவதரித்து, மக்களுக்கு தொந்தரவு கொடுக்கும் அனைத்து துஷ்டர்களையும் நொடிப்பொழுதில் கொன்று, க்ருதயுகத்தின் தர்மங்கள் மறுபடி பிறப்பதற்கு ஏற்பாடுகளை செய்வார்.

**ஷபரியஞ்சல திந்தெ குபுஜெய கூடிதெ**
**அபுஜதளாக்ஷாஷ்ட மஹிஷேர கோலெ ।**
**அபுஜதளாக்ஷாஷ்ட மஹிஷெயரிகெ**
**ப்ரபு[4]வாதவகெ பஹு நீத[1]வெ கோலெ ।।174**

பகவந்தன் ஸ்ரீராமனாக, சபரியின் எச்சில் பட்ட பழங்களை தின்றான். குபுஜையிடம் சேர்ந்தான் ஸ்ரீகிருஷ்ணன். [எவ்வித தோஷங்களும் இல்லாத ஸ்ரீஹரிக்கு இவை தோஷங்களே இல்லை. பக்தவத்ஸலன் என்னும் குணத்தையே மேற்கண்ட இடங்களில் நிரூபித்தார் அவர்]. அம்புஜதளாக்ஷ = தாமரைக்கண்ணன். அஷ்ட மஹிஷியரிகெ ப்ரபுவாதவகெ = எட்டு பெண்களுக்கு தலைவனான. பஹுனீதவெ = ஸ்ரீகிருஷ்ணன் சொல்லிய நீதிக்கு இது சரியானதா?

அஷ்ட மஹிஷியர் மட்டுமா? 16,108 பெண்களை திருமணம் செய்தவன். மேலும் பற்பல கோபிகா ஸ்த்ரீயர்களை சேர்ந்தான். இது ஸ்ரீகிருஷ்ணனின் அற்புத சக்தியை

நிரூபிப்பதோடு மட்டுமல்லாமல், இத்தகைய சக்தியில், உலகத்தில் இருக்கக்கூடிய நீதிநெறிகளை எதிர்பார்ப்பது சரியில்லை.

**ஸ்வாரிபோ[1]க[3]லு ப[3]லு தூ[3]ர வைகுண்ட[2]வு**
**யாரு போ[1]த[3]ரு ஹிந்தி[3]ருகரு கோலெ |**
**யாரு போ[1]த[3]ரு ஹிந்தி[3]ருகி[3] மரளி ஸுத்தி**
**யாரு தரரு ஏனாதரு கோலெ ||175**

ஸ்வாரிபோகலு = தாம் அங்கு போவதற்கு (பெரியவர்கள் வருவது / போவதைக் குறிப்பதற்கு 'ஸ்வாரி' என்று சொல்வது வழக்கம்). சவாரி = வாகனத்தில் ஏறிப் போவதற்கு சவாரி என்று பெயர். சவாரியையே, ஸ்வாரி என்று சொல்கிறார் தாசர். வைகுண்டவு = உன் நித்யலோகம் என்னும் வைகுண்டம். பலுதூர = வெகு தூரத்தில் இருக்கிறது (போய் வருவதற்கு கஷ்டம்). போதரு ஹிந்திருகரு = அங்கு போனவர்கள் திரும்ப வருவதில்லை. மரளி ஸுத்தி யாரு தரரு = வைகுண்டத்திலிருந்து திரும்பி வந்து யாரும் அந்த உலகத்தின் சுத்தத்தை தருவதில்லை.

நித்ய முக்தர்கள் முழுமையான மகிழ்ச்சியுடன் ஓடியாடும் இடம் வைகுண்டம். அங்கு ஸ்ரீகிருஷ்ணனின் தரிசனம் தினமும் கிடைக்கும். இப்படியான விஷயங்களை சாஸ்திரங்களிலிருந்து கேட்கவேண்டுமே தவிர, அங்கு போய் திரும்பி வந்து, அந்த இடத்தில் அதிசயங்களை விவரிப்பவர்கள் யாருமில்லை என்று சொல்வது, அப்படி திரும்பி வந்தால் மறுபடி இந்த துக்கமயமான வாழ்க்கையில் மூழ்கவேண்டியிருக்குமே என்று சொல்வதெல்லாம் வீண் வார்த்தைகள்.

**ஹெத்த மகளனித்த அத்தெய பிடதவ**
**மத்தெ பரஹெண்ணுகள பிடுவனெ கோலெ |**
**மத்தெ பரஹெண்ணுகள பிடுவனெ இவ தன்ன**
**அர்த்தி[2]ய மகள மதுவ்யாத கோலெ ||176**

ஸ்ரீஹரி தந்தை, தாய், உற்றார், உறவினர் என அனைத்து விதங்களிலும் அனைவருக்கும் சொந்தமாக இருக்கிறார். இப்படி இருந்தாலும், லட்சுமிதேவியின் சன்னிதானம் / ஆவேசம் இல்லாத யாரும், அவருடன் சேரமுடியாது. ப்ருதிவிதேவி, லட்சுமிதேவியின் பூ-ரூபத்தின் ஆவேசத்தைக் கொண்டிருப்பதால், பூதேவியென்றே அழைக்கப்படுகிறாள். ஸ்ரீஹரி, பூதேவியிடம், நரகாசுரனை மகனாகப் பெற்றார். பூதேவியின் மகளே சீதாதேவி. அவளை ஸ்ரீராமரூபி ஸ்ரீஹரியே திருமணம் புரிந்தார்.

இதனால், பூதேவி ஸ்ரீஹரியின் அத்தையும் ஆகிறாள். சீதை மகளும் ஆகிறாள் என லௌகிகமாக நினைத்து, ஸ்ரீஹரியிடம் குறைகளை கண்டுபிடிப்பது தவறாகும். அலௌகிக-புருஷனான ஸ்ரீஹரியிடம் லௌகிக விஷயங்களைக் குறித்து சிந்திப்பது சரியல்ல என்று அறியவேண்டும்.

**தலெஹொட$^{3}$க$^{1}$ ஹிரிய மக கிரிய மக சஞ்சல**
**பலு ஜாடி$^{3}$கே$^{3}$டி$^{3}$ மொம்மக கோலெ |**
**பலு ஜாடி$^{3}$கே$^{3}$டி$^{3}$ மொம்மக னெந்து**
**ப$^{4}$லுகு$^{3}$ண நகு$^{3}$த$^{1}$ நுடித$^{3}$னு கோலெ ||177**

ஹிரிய மக = ஸ்ரீஹரியின் மூத்த மகனான பிரம்மன் (சத்யலோகாதிபதி). தலெஹொடக = பிரம்மனுக்கு முதலில் ஐந்து தலைகள் இருந்தன. பைரவ ரூபத்தினால் (ருத்ரர்) ஒரு தலை கொய்யப்பட்டது. ஆகவே பின்னர் நான்முகன் என்று பெயர் பெற்றார்.

கிரிய மக சஞ்சல = ஸ்ரீஹரியின் சிறிய மகன் - எப்போதும் சஞ்சாரத்திலேயே இருப்பவர் - வாயுதேவர். ஓரிடத்தில் நிற்காத சஞ்சல ஸ்வபாவமுள்ளவன்.

மொம்மக = ருத்ரர், பலு ஜாடிகேடி = எப்போதும் பிறரின் வார்த்தைகளுக்கு செவிசாய்த்து அவற்றை கேட்பவன். ஆகையால், அயோக்யர்களுக்கு பற்பல வரங்களைக் கொடுத்து,

அதனால் பல ஆபத்துகளுக்கு காரணமானவன். பலுகுண = அர்ஜுனன். நகுத நுடிதனு = இவ்வாறு அர்ஜுனன் சிரித்தவாறு கூறினான்.

**ஹொரகினிந்த$^{3}$ ப$^{3}$ந்த$^{3}$ளு திருகா$^{3}$லதி$^{1}$ப்பி$^{1}$யு**
**ஹெரரிகு$^{3}$பகா$^{1}$ரி மனெமாரி கோலெ |**
**ஹெரரிகு$^{3}$பகா$^{1}$ரி மனெமாரி ஹடெ$^{3}$து ஹடெ$^{3}$து**
**தருளரன்னெல்ல எஸெதளு கோலெ ||178**

திருகாலதிப்பியு = எப்போதும் பிறருடன் சுற்றிக் கொண்டிருப்பவள். ஹொரகினிந்த பந்தளு = (பூலோகத்திற்கு) தேவலோகத்திலிருந்து வந்தாள். (உன் மகளான / பாதோதகளான கங்கை). சந்தனு ராஜனை திருமணம் செய்து வாழ்ந்து வந்தாள்.

ஹெரரெகெ = பிறருக்கு. உபகாரி = ஸ்னானம் செய்து தன்னை வணங்குபவர்களுக்கு உதவி செய்பவள். மனெமாரி = வீட்டினருக்கு (சந்தனு முதலானவர்களுக்கு) ம்ருத்யு ஸ்வரூபள். ஹடெது ஹடெது = சந்தனு ராஜனிடமிருந்து மேன்மேலும் மக்களைப் பெற்று. தரளரனெல்ல = ஒவ்வொரு குழந்தையாக மொத்தம் ஏழு பேரை. எஸெதளு = பாகிரதி ஆற்று வெள்ளத்தில் (க்ரூர ராக்ஷசியைப் போல) தூக்கி எறிந்தாள். இத்தகையவள் உன் மகள்.

**ப$^{3}$லு பா$^{4}$க்யவந்தெ$^{1}$ந்து$^{3}$ ஜக$^{3}$வெல்ல மெச்சலு**
**தலெயல்லி ஹொத்த மஹதேவ கோலெ |**
**தலெயல்லி ஹொத்த மஹதேவ இந்த$^{2}$வள**
**ப$^{3}$லு பா$^{1}$திவ்ரத்யத$^{3}$ நோடி$^{3}$த்$^{3}$ய கோலெ ||179**

மிகவும் பவித்ரமானவள் என்று உலகத்தில் அனைவராலும் போற்றப்படும் கங்கையை, சிவன் தலையில் ஏந்தினார். பகீரத ராஜன், தன் பித்ருகளின் மேம்பாட்டிற்காக, கங்கையை ஸ்வர்க்கத்திலிருந்து வரவழைத்தான். அப்போது சிவன் கங்கையை தலையில் ஏந்தினார். இத்தகையவளின்

பதிவிரதத்தைப் பார்த்தாயா? மகாதேவனின் ரேதஸ்ஸை அக்னி மூலமாக தரித்து, ஷண்முகனை மகனாகப் பெற்றாள். வருணதேவனே இத்தகையவளின் உண்மையான கணவன்.

**நில்லு நில்லெலொ நின்ன சொஸெயெம்புவளு**
**எல்லர பா[3]யிகெ[3] ப[3]ருவளு கோலெ |**
**எல்லர பா[3]யிகெ[3] ப[3]ருவளு இஷ்டிரலு**
**ஒள்ளேதெ[3] நின்னய மனெத[1]ன கோலெ || 180**

நில்லு நில்லெலோ = பொறுமையாக இரு (எதுவும் பேசாதே). நின்ன சொஸெ = மருமகள். உன் மகனான பிரத்யும்னனின் மனைவி (ரதிதேவி, மாயாவதி நாமகளாக ஷம்பராசுரனின் ராணியானாள். பிரத்யும்னனுக்கு அனேக மாயைகளை உபதேசித்து, அவன் மூலமாக ஷம்பராசுரனைக் கொன்று, பிரத்யும்னனுடன் ஓடி வந்தவள் என்னும் விஷயத்தை) யார் அறிவர்? இது உன் வீட்டுக்கு / வம்சத்திற்கு அழகா?

காமதேவனின் மனைவியான ரதிதேவி, மாயாவதி என்ற பெயருடன் ஷம்பராசுரனின் மனைவியாக இருந்தார். ஆனாலும், அவள் அவனுடன் சேர்ந்திருக்கவில்லை. நாரதர் மூலமாக கேள்விப்பட்டு, தன் கணவனான குழந்தை ரூபத்தில் இருந்த (ஷம்புகாசுரனால் கடலில் எறியப்பட்டு, ஒரு மீனின் வயிற்றில் சேர்ந்து, மீனவர்களால் காப்பாற்றப்பட்டு வளர்க்கப்பட்டு வந்த) பிரத்யும்னனை, உடனடியாக வாலிபனாக மாற்றி, அவனை திருமணம் செய்துகொண்டாள்.

**மகன மகனு ப[3]லு கொ[1]ண்டெ[3]கா[3]ரனாத[3]**
**மகள மகனு நின்ன எதெ[3]க[3]ச்ச கோலெ |**
**மகள மகனு நின்ன எதெ[3]கெ[3]ச்சத்து[3] கண்டு**
**நகுதாரெ நின்ன சரியவரு கோலெ ||181**

மகன மகனு = (ஹே கிருஷ்ணா!), உன் மகன் பிரத்யும்னனின் மகனான அனிருத்தன், கொண்டெகார = ஒரு நடத்தை கெட்டவன் (பாணாசுரனின் மகளான உஷையை

கள்ளத்தனமாக சேர்ந்தவன்). ஸ்ரீகிருஷ்ணனே சென்று, பாணாசுரனைக் கொன்று, பிரத்யும்னனை மீட்டுக் கொண்டு வந்தான். மகள மகனு = ருத்ரதேவர் (இவர் மகனின் மகனும் ஆவார். பாரதிதேவி, பிரத்யும்ன ரூபி ஸ்ரீஹரியின் மகள். 'க்ருதிரமண ப்ரத்யும்ன நந்தனே'). ருத்ரதேவர், அசுராவேசம் வந்தபோது சில சமயங்களில் ஸ்ரீஹரியுடன் போர் புரிந்தார். தன் சிஷ்யனான பாணாசுரனுக்காகவும் ஸ்ரீஹரியுடன் சண்டை போட்டிருக்கிறார். எதெகெச்சத்து = மார்புக்கு அம்பு விட்டான்.

**ருத்ர ப்ரம்மஹத்யகா$^{3}$ர க்ஷுத்ர ப$^{3}$லீந்த்$^{3}$ரனு**
**க$^{1}$த்து$^{3}$ சுவர்ணத மகு$^{1}$ட$^{1}$வ கோலெ |**
**க$^{1}$த்து$^{3}$ சுவர்ணத மகு$^{1}$ட$^{1}$வ பலராம**
**மத்$^{3}$யபா$^{1}$யி இன்னு நுடி$^{3}$தே$^{3}$னு கோலெ ||182**

பிரம்மஹத்ய தோஷத்தை செய்தவர் ருத்ரர். பிராமண ஸ்ரேஷ்டரான பிரம்மனின் ஐந்தாவது தலையைக் கொய்தவர். கைகளில் மண்டை ஓட்டுடன், காசி க்ஷேத்திரத்தில் முக்தியடைந்தார். சேஷசாயியான ஸ்ரீபத்பனாபனின் கிரீடத்தை, அசுர ஆவேசம் கொண்ட பலிசக்ரவர்த்தி, திருடிச் சென்றான். கருடதேவர், பலியுடன் போரிட்டு வென்று, கிரீடத்தைக் கொண்டு வந்து, கோமந்தக மலையில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த ஸ்ரீகிருஷ்ணனிடம் சமர்ப்பித்தான்.

அண்ணனான பலராமன், மத்யபானம் குடித்து, எப்போதும் சிவந்த கண்களை உடையவன். இன்னு நுடிதேனு = உன் மற்றும் உன் உறவினர்களின் யோக்யதையைப் பற்றி இன்னும் சொல்கிறேன் கேள்).

**சந்த்ர குருதல்பக$^{3}$ இந்த்ர தத்ஸரியோக$^{3}$**
**ச$^{1}$ந்து$^{3}$ள்ள பளக$^{3}$ நினகவரு கோலெ |**
**ச$^{1}$ந்து$^{3}$ள்ள பளக$^{3}$ நினகவரு எனுதலி**
**மந்தஹாஸதி நுடிதனு கோலெ ||183**

சந்திரன், தனது குருகளான பிருஹஸ்பத்யாசார்யரின் மனைவியான தாராதேவியிடம் தவறாக நடந்துகொண்டான். சந்திரன், உங்களின் வம்சத்து மூலபுருஷன். இந்திரன், உனது அண்ணன் - அதிதிதேவியின் மகன். (அதிதியின் மகன் வாமனரூபி ஸ்ரீஹரி).

தத்ஸரியோக = சந்திரனைப் போல, ரிஷிபத்னியான அகல்யையை மோகித்தான். இப்படியாக உன் உற்றார் பலரும் நீதிநெறி தவறியவர்கள், என்று அர்ஜுனன் புன்னகைத்தவாறு (கேலியுடன்) கூறினான். உண்மையில், சந்திரன் மற்றும் இந்திரன் இருவரும் ஸ்ரீஹரியின் காரிய சாதனைக்காக, அந்த செயல்களை செய்தனர் என்பதே சரி.

**மாத்ருத்ரோஹி நாரத பித்ருத்ரோஹி பிரஹ்லாத**
**ப்ராத்ருத்ரோஹி விபீஷணனு கோலெ |**
**ப்ராத்ருத்ரோஹி விபீஷணமுக்யரு ப்ரேம**
**பாத்ரராதரு நினகதரிந்த கோலெ ||184**

நாரதர் = பிரம்மனின் மானஸ புத்ரர்களில், மரீச்யாதி ஒன்பது பிரஜாபதிகளுக்குப் பிறகு பிறந்தவர். இவர் பிரம்மசாரி. பரமேஸ்வரனின் சாபத்தினால் தேகதியாகம் செய்து, பர்வத முனியின் தாய்மாமனாக பிறந்த பிரம்மரிஷி. இவரே, புராணங்களில் பிரசித்தமான நாரதர். எப்போதும் விஷ்ணுசக்கரத்தால் காப்பாற்றப்படுபவனான அம்பரீஷ ராஜனுக்கு, ஸ்ரீமதி என்னும் மகள் இருந்தாள். நாரதர் அவளை மோகித்து, அவளை அடையமுடியாததால், அம்பரீஷனுக்கு சாபம் கொடுத்து, தன் தேஜஸ்ஸினை இழந்தார். பின்னர், ஸ்ரீமதியை அம்பரீஷன் விஷ்ணுவிற்கு திருமணம் செய்து கொடுத்தான் என்று தாமஸ புராணத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. ஆகையால், ஜகத்ஜனனியை மோகித்த நாரதர், மாத்ருத்ரோஹி எனப்படுகிறார்.

பிரகலாதன் = ஸ்ரீ நரசிம்மன் மூலமாக தன் தந்தையை கொல்லவைத்த பிரகலாதன், பித்ருத்ரோஹி எனப்படுகிறார். உண்மை என்னவெனில், தன் தந்தையுடன் சேர்த்து 21 குல பித்ருகளையும் கடைத்தேற்றிய விஷ்ணுபக்தர், பிரகலாதன்.

விபீஷணன் = சீதையை ஒப்படைத்துவிட்டு, ஸ்ரீராமனிடம் சரணாகதி அடைந்துவிடு என்று நல்வார்த்தைகள் சொல்லியும் கேட்காத தன் அண்ணனான ராவணனைத் துறந்து, ஸ்ரீராமனிடம் சரணடைந்தவர் விபீஷணன். ராவணனின் சார்பை எடுக்காத காரணத்தால், இங்கு ப்ராத்ருத்ரோஹி என்று அழைக்கப்படுகிறார்.

உன் உறவினர்கள்தான் ஒரு மாதிரியானவர்கள் என்று பார்த்தால், மேற்கூறிய உன் பக்தர்களும் அப்படியே இருக்கின்றனர் என்று கேலியுடன் அர்ஜுனன் ஸ்ரீகிருஷ்ணரைப் பார்த்து கூறுகிறான்.

**ஸ்வாமித்ரோஹி அக்ரூர குருத்ரோஹி தர்மஜ**
**பிரம்மத்ரோஹிகளு யாதவரு கோலெ ।**
**பிரம்மத்ரோஹிகளு யாதவரிகெல்ல**
**ஸ்வாமியெந்து நீனெஸுவி கோலெ ।।185**

அக்ரூரர்= உன் பக்தனான அக்ரூரர், ஸ்வாமித்ரோஹி= ஸ்வாமி யான உனக்கே துரோகம் செய்தவர் (சத்ப்ரா-ஜெதனனைக் கொன்று அவனிடமிருந்து ஸ்யமந்தக மணியை அபகரித்து, ஸ்ரீகிருஷ்ணனையே சில காலம் வஞ்சித்தவர்). தர்மஜ = யுதிஷ்டிரர். குருத்ரோஹி = (உன் சொல்லுக்கேற்ப) ‘அஷ்வத் தாமா ஹத:’ என்று சொல்லி, குருகளான துரோணரின் மரணத் திற்கு காரணமானவர். யாதவரு = உன் வம்சத்தவர்கள். பிரம்ம த்ரோஹிகள் = பிராமணர்களை வஞ்சித்தவர்கள். சாம்பனுக்கு பெண் வேடமிட்டு பிராமணரை ஏமாற்றி, அவரிடம் யாதவர் களின் குலமே அழியுமாறு சாபத்தைப் பெற்றனர்). இத்தகைய துரோகிகளுக்கு ஸ்வாமியான உன் கௌரவம் எத்தகையது?

**அத்தெய மகனெந்து மத்தெ தங்கிய கொட்டு**
**அர்த்தி[2]லி கத[2]வ நடெஸித கோலெ |**
**அர்த்தி[2]லி ரத[2]வ நடெஸிதுபகாரவ**
**எத்தலு தா[3]னவ திருஹித கோலெ ||186**

கம்சனுக்கு வசுதேவர், அத்தைப் பையன். அவருக்கு தன் தங்கையான தேவகியைக் கொடுத்து, திருமணம் நடந்த நாளன்று, அவர்களை ரதத்தில் அமரவைத்து, தானே அந்த ரதத்தை ஓட்டி வந்தான். இந்த உதவியை சரியாக்க, மகனான நீ, அதற்கு நேர் எதிராக, அவனையே கொன்றாய். இதுவே ஸ்ரீகிருஷ்ணன் மேல் இருக்கும் குற்றச்சாட்டு. கம்சன் ரதத்தை ஓட்டி வந்தபோது, தேவகியின் எட்டாவது குழந்தை, கம்சனைக் கொல்லும் என்ற அசரீரி வாக்கு கேட்டது. அதைக் கேட்டு கம்சன் செய்த செயல்களையும், பின்னர் கிருஷ்ணனைக் கொல்வதற்கு அவன் செய்த முயற்சிகளையும் கேட்டால், மேற்சொன்ன குற்றச்சாட்டு தவறு என்றே சொல்லமுடியாது.

**குண நிதி[4] நின்ன துர்கு[3]ணியெந்து பேளிதெ**
**எணிஸதிரென்ன அபராத[4] கோலெ |**
**எணிஸதிரென்ன அபராத[4]வெனுதலி**
**மணித[3]னு ஸ்ரீஹரிய சரணக்கெ கோலெ ||187**

குண நிதி = நற்குணங்களின் கடலே. நின்ன துர்குணியெந்து பேளிதே = உன்னை துர்குணன் என்று தவறாக குற்றம் சாட்டி விட்டேன். எணிஸதிரென்ன அபராத = அப்படிப் பேசிய என் தவறினை எண்ணாமல் மன்னியுங்கள், என்று அர்ஜுனன் ஸ்ரீகிருஷ்ணனிடம் வேண்டினான்.

**ஸ்வாமிப்[4]ருத்ய ந்யாயவரியதெ[3] நா நின்ன**
**பாமரனந்தெ நுடிதேனு கோலெ |**
**பாமரனந்தெ நுடிதபராத[4]வ**
**ஸ்ரீமனோஹரனே மன்னிஸு கோலெ ||188**

ஸ்வாமிப்ருத்ய நியாயவரியதெ = நீ சர்வஸ்வாமி. அனைத்து உலகங்களும் உனக்குக் கட்டுப்பட்டவையே. ஜீவர்கள் அனைவரும் உன் தாசர்கள் என்னும் விஷயத்தை புரிந்து கொள்ளாமல். பாமரனந்தெ நுடிதேனு = அஞ்ஞானியாக நான் பேசிவிட்டேன்.

ஸ்ரீமனோஹரனே = ஸ்ரீமகாலட்சுமிதேவியைக் கூட உன் அழகு, ஞானானந்தாதி குணங்களால் எப்போதும் ஈர்க்கும் ஹே கிருஷ்ணா! என்னை மன்னியுங்கள். பரமாத்மனின் மகிமைகளை புரிந்துகொள்ளாமல், ஜீவர்கள் தங்களின் அல்பமான அறிவினால் செய்யும் நடவடிக்கைகள் எத்தகைய பிரச்னைகளுக்கு வழிவகுக்கும் என்பதை இந்த நுடி சுட்டிக் காட்டுகிறது. தாங்கள் செய்த தவறுகள் அவர்களுக்குப் புரிந்தவுடன், உடனடியாக ஸ்ரீஹரியை வேண்டி, மன்னிப்பு கேட்கவேண்டும் என்பதையும் இங்கு தெரிவிக்கிறார்.

**நின்ன நாம முத்ரெ த4ரிஸித தாஸரு**
**உன்னந்த பா1வன மாடலு கோலெ |**
**உன்னந்த பா1ப1வ மாடலு பரிஹரிஸி**
**மன்னிஸி பொரெவுது நின்ன நாம கோலெ ||189**

தாஸரு = பக்தர்கள். நின்ன நாமமுத்ரெ = 12 நாம முத்திரைகளை, சங்கு சக்கர சின்னங்களை (அல்லது நாராயண முத்திரையை) தரிஸித = தம் தேகங்களில் தரித்த. உன்னந்த = மிகப்பெரியதான (பிரம்மஹத்யாதி தோஷங்களை செய்திருந்தாலும்). நின்ன நாம = நாராயணாதி உன் நாம சங்கீர்த்தனைகள். பரிஹரிஸி = அந்த பாவங்களைக் களைந்து. பொரெவுது = அவர்களை காப்பாற்றும்.

**ப3ட3னடு நடு3கு3த1 குச1க3ளல்லாடுத**
**முடி3த3 புஷ்பகளு உது3ருத1 கோலெ |**
**முடி3த3 புஷ்பகளு உது3ருத1 அண்ணன**
**அடிகளிகெ3ரகி3த3ளு சுப4த்ரெ கோலெ ||190**

படனடு நடுகுத = சிறிய இடுப்பானது, சௌந்தர்யத்திற்கு லட்சணம். குசகளு = ஸ்தனங்கள். புஷ்பகளு உதுருத = சூடிக் கொண்டிருக்கும் புஷ்பங்கள் கீழே விழ. அண்ணன அடிகளி கெரகிதளு = ஸ்ரீகிருஷ்ணனின் பாதங்களில் விழுந்தாள், தங்கையான சுபத்திரை.

**ஹெண்ணு கொட்ட மேலெ ஹிதவெ சிந்திஸபேகு**
**இன்னு நுடிதுதரிந்த ப²லவேனு கோலெ |**
**இன்னு நுடிதுதரிந்த ப²லவேனு அண்ணய்ய**
**என்ன கடெ³ நோடி³ மன்னிஸு கோலெ ||191**

சுபத்திரை ஸ்ரீகிருஷ்ணனை வேண்டுகிறாள். பெண்ணின் பிறந்த வீட்டினர், அந்தப் பெண்ணின் நலனுக்காக, அவளின் கணவர் மற்றும் அவரைச் சேர்ந்தவர்கள் என யாருக்கும் தொந்தரவு கொடுக்கும் வண்ணம் நடக்கக்கூடாது. (லௌகிக விஷயமான இதை, சுபத்திரை தன் அண்ணனான ஸ்ரீகிருஷ்ணனுக்கு நினைவுபடுத்துகிறாள்). அவர்கள் செய்யும் தவறுகளை கவனத்தில் எடுத்துக் கொள்ளக்கூடாது. என் எஜமானரின் (அர்ஜுனனின்) பேச்சுகள் உன் மனதை நோகடித்துவிட்டது என்று எப்படி சொல்லலாம்? ஆனாலும், அவர் மன்னிப்பு கேட்கிறார். தங்கையான என்னையும் மன்னியுங்கள், என்று வேண்டினாள் சுபத்திரை.

**ஜாம்பூனதாம்பர நினகெ தந்தே³னு ஸ்வாமி**
**ஜாம்பவதீஷ ஸ்வீகரிஸு கோலெ |**
**ஜாம்பவதீஷ ஸ்வீகரிஸி நமகின்னு**
**இம்பு³ வைகுண்ட²தி கொடபே³கு¹ கோலெ ||192**

ஜாம்பூனத = தங்கம். ஜாம்பூனதாம்பர = தங்கத்தால் வேயப்பட்ட பீதாம்பரம். ஜாம்பவதீஷ = ஹே ஸ்ரீகிருஷ்ணா! என் மரியாதையை (தாம்பூலத்தை) ஏற்றுக்கொள். நமகின்னு = அடுத்து எங்களுக்கு. வைகுண்டதி இம்பு = வைகுண்டத்தில் ஒரு இடம். கொடபேகு = கொடுக்கவேண்டும். உன்

(ஸ்ரீகிருஷ்ணனின்) அருள் இல்லாமல் எங்களுக்கு (அனைவருக்கும்) மோக்ஷம் இல்லை என்பதை இங்கு குறிப்பிடுகிறார். இதுவரை நாங்கள் பேசிய பேச்சுகளால் வெட்கமடைந்து வருத்தமடைகிறோம் என்று சொல்லிக் கொள்கிறார்கள்.

**ஏனவ்வ சுப$^{4}$த்ரெ ஈ நுடி நினகே$^{3}$கெ$^{1}$**
**நீனு நின்னிந்த நிம்மவரு கோலெ ।**
**நீனு நின்னிந்த நிம்மவரு என்ன**
**ப்ராணபதக வெனுதிஹெ கோலெ ।।193**

ஈ நுடி நினகேகே = என்னை மன்னித்துவிடுங்கள் என்று நீ ஏன் சொல்லவேண்டும், சுபத்திரை?. நீனு நின்னிந்த நிம்மவரு = நீ, அர்ஜுனன் மற்றும் அவரது சகோதரர்கள். என்ன ப்ராணபதக வெனுதிஹ = என் உயிர் போல எனக்கு மிகவும் பிரியமானவர்கள், என்று சொல்கிறேன்.

**மொதலெ அத்தெய மக அதரிந்த நின்ன கொட்ட**
**ஹெதருவரெ அவரு நமகின்னு கோலெ ।**
**ஹெதருவரெ அவரு நமகின்னு எனுதலி**
**முததிந்த கேளி நகுதிப்ப கோலெ ।।194**

உனது திருமணத்திற்கு முன்பே, அர்ஜுனன் எனக்கு அத்தைப் பையன் (குந்திதேவி, ஸ்ரீகிருஷ்ணனின் அத்தை). இந்த உறவு இருந்ததாலேயே, உனக்கு அர்ஜுனனுக்குக் கொடுத்து மணம் முடிக்கப்பட்டது. என் விஷயத்தில் எதிராகப் பேச, அர்ஜுனனுக்கு ஏன் தடை? (தடையே இல்லை). இவர்கள் அனைவரும் பேசிக்கொண்டதைக் கேட்டு ஸ்ரீஹரி புன்னகைத்துக் கொண்டிருந்தான்.

**அத்திகெ நீ நம்ம ஹெத்த தாயி சரியம்ம**
**அத்யந்த நானு நுடிதேனு கோலெ ।**
**அத்யந்த நானு நுடித$^{3}$ப$^{1}$ராத$^{4}$வ**
**சித்ததொளிட$^{3}$தெ$^{3}$ கருணிஸு கோலெ ।।195**

சுபத்திரை பேசுவது:
ஹெத்த தாயி சரியம்ம = அண்ணியானவள் தாயைப் போலவே ஆகும். அத்யந்த நுடிதேனு = என் தகுதிக்கு மீறி தகாத வார்த்தைகளை பேசிவிட்டேன். இந்த என் தவறுகளை, உன் மனதில் வைத்துக் கொள்ளாமல், கருணிஸு = என்னை மன்னித்துவிடு.

**தேவி ருக்மிணி நீ தேவகி சரியம்ம**
**நா விக$^3$ட$^3$பு$^3$த்தி$^4$யலி நுடிதேனு கோலெ |**
**நா விக$^3$ட$^3$பு$^3$த்தி$^4$யலி நுடித$^3$பராத$^4$வ**
**பா$^4$வதொளிடதெ பாலிஸு கோலெ ||196**

தேவகி, சுபத்திரையின் மகள். ருக்மிணிதேவியின் அத்தை. விகடபுத்தியலி நுடிதே = கெட்ட புத்தியுடன் பேசிய (அஞ்ஞானத்தில் பேசிய). என் தவறுகளை, பாவதொளிடதெ = மனதில் வைத்துக்கொள்ளாமல், (என்னை மன்னித்துவிடு).

**சுகுணஸாகா$^1$ரியெ நிக$^3$மாபி$^4$மானியெ**
**விக$^3$ட$^3$பு$^4$த்தியலி நுடியேனு கோலெ |**
**விக$^3$ட$^3$பு$^4$த்தியலி நுடியேனு நா நின்ன**
**மகளு பாகீரதி சரியெம்ம கோலெ ||197**

ஸ்ரீருக்மிணி தேவியின் நிஜ ஸ்வரூபத்தை, உண்மையாக அறிந்து அவளை துதித்து, தன்னை மன்னிக்குமாறு மறுபடி மறுபடி வேண்டுகிறாள் சுபத்திரை. சுகுணசாகாரியெ = ஞானா னந்தாதி சத்குணங்களின் மூர்த்தியான (தன்னுடைய அனைத்து அவதார ரூபங்களிலும்,) லட்சுமிதேவிக்கு ப்ராக்ருத தேகங்கள் இல்லை. சிதானந்தாத்மக தேகம் கொண்டவள். நிகமாபி மானிகளு = ஹே ருக்மிணி! நீ வேதங்களுக்கு அபிமானினி யாக இருக்கிறாய். பெற்ற மகள்கள் தாயைக் கண்டு நிந்தா ஸ்துதி செய்தாலும் (திட்டினாலும்), பெற்ற தாயானவள் அதை சகித்துக் கொண்டு போகிறாள். அதுபோலவே, நான் பேசிய

பேச்சுகளை, உன் மகளான பாகிரதி தேவி பேசுவதைப் போல எண்ணி, மன்னித்துவிடுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

**சிந்து[4]ஜாதெ[1] தே[3]வி மந்தருத்தா[4]ரியெ**
**மந்தமதியலி நுடியேனு கோலெ ।**
**மந்தமதியலி நுடிதபராத[4]க**
**ளொந்தெணிஸதெ கருணிஸூ கோலெ ।।198**

ஸ்ரீருக்மிணி, ஸ்ரீமன் மகாலட்சுமியின் அவதாரம். அமிர்தத்துக்காக தேவ தைத்யர்கள் பாற்கடலைக் கடைந்த போது, கடலிலிருந்து லட்சுமிதேவி தோன்றினார். ஆகையால், அவர் சமுத்ர-மகள். பிறகு நடந்த சுயம்வரத்தில், லட்சுமிதேவி, அஜித ரூப ஸ்ரீஹரியை தேர்ந்தெடுத்து, திருமணம் செய்து கொண்டார் (ஸ்ரீவாதிராஜரின் லட்சுமிசோபானெயை பார்க்கவும்).

**சரியல்லதவளு சரியெந்து நுடிதேனு**
**ஹிரியத்தெ மகளெ நமகின்னு கோலெ ।**
**ஹிரியத்தெ மகளெ நம்மிந்த தப்பெந்து**
**சரணக்கெரகிதளு சுப[4]த்ரெ கோலெ ।।199**

சரியல்லதவளு = லட்சுமிஸ்வரூபளான ருக்மிணிக்கு, சுபத்திரை எந்தவொரு விதத்திலும் சமமில்லை. ஸரியெந்து = சரிசமமாக (பேசினாள்). ஹிரியத்தெ மகளெ = ஸ்ரீகிருஷ்ணனுக்கு அனேக மனைவிகள். அவர்களின் தாய் அனைவரும் அவனுக்கு மாமியார்களே. ருக்மிணியே மூத்த மனைவி. ஆகையால், ருக்மிணியின் தாயான (வருணனின் மனைவி) கங்காதேவி, ஸ்ரீகிருஷ்ணனின் தங்கையான சுபத்திரைக்கும் மூத்த அத்தையே ஆவார். அத்தகைய அத்தையின் மகளான ருக்மிணிக்கு, நான் தவறு செய்து விட்டேன் என்று சொல்லி, சுபத்திரை, விழுந்து வணங்கினார்.

**எரகித நாதினிய கரகள பிடிதெத்தி**
**ப⁴ரதி த¹க்கயிஸி ருக்மிணி கோலெ |**
**ப⁴ரதி த¹க்கயிஸி ருக்மிணி சுப⁴த்ரெ**
**தொ³ரெ மகளெ நமகெ எரகுவிய கோலெ || 200**

எரகித = நமஸ்கரித்த. நாதினிய = கணவனின் தங்கையை (சுபத்திரையை). பரதி தக்கயிஸி = விரைவாக சமாதானம் செய்து. தொரெமகளெ = ராஜகுமாரியே! [இளவரசனான அர்ஜுனனைக் கைப்பிடித்து, ராஜ குலத்தை சேர்ந்தவளானாய். ஆனால், நாங்கள் (கிருஷ்ணரை சேர்ந்தவர்) அரசர்கள் அல்லர்]. இப்படியிருக்கையில், நீ எங்களை வணங்கலாமா?

**பிரம்மேஷ ஷக்ரரவிதர்ம ஷஷங்கபூர்வ**
**சும்மனஸ ஸந்ததி மொதலாகி கோலெ |**
**சும்மனஸ சந்ததி மொதலாகி ஸ்ரீதேவி**
**நிம்ம கடாக்ஷ ப³யசுவரு கோலெ ||201**

பிரம்ம = பிரம்மன். ஈஷ = ருத்ரர். ஷக்ர = இந்திரன். ரவி = சூரியன். தர்ம = யமன். ஷஷாங்க = சந்திரன். ஆகியோர், ஸுமனஸ ஸந்ததி = ஆகிய தேவதைகளின் சமூகம். நிம்ம கடாக்ஷ பயசுவரு = உன் கருணைப் பார்வையை வேண்டுவர்.

**அந்த³ரேனம்ம நின்ன கு¹ந்த³ ஹிடிதவராரு**
**மந்த³ரோத்த⁴ரன கி¹ருத¹ங்கி³ கோலெ |**
**மந்த³ரோத்த⁴ரன கி¹ருத¹ங்கி³ சுப⁴த்ரெ**
**கந்தகுங்குமவ தரிசம்ம கோலெ ||202**

ருக்மிணி சொல்கிறார்:
அந்தரேனம்ம - நீ எங்களுக்கு எதிராக பேசினால் என்ன பிரச்னை? (ஒன்றுமில்லை). நிம்ம குந்த ஹிடிதவராரு = உன் தவறுகளை யார் சுட்டிக் காட்டப் போகிறார்கள்? (யாருமில்லை). மந்தரோத்தரனு = ஸ்ரீகிருஷ்ணனின் (பாற்கடலைக் கடையும் போது மத்தாக இருந்த மந்தார மலையானது மூழ்காமல் இருக்க, அதனடியில் தாங்கிப் பிடித்த கூர்மாவதாரமானவன்

ஸ்ரீகிருஷ்ணனே). கிருதங்கி = (பாசமிகு) தங்கை. அப்படிப்பட்ட நீ, வந்து மஞ்சள் குங்குமங்களை இட்டுக்கொள் என்று அழைத்தார்.

**நுடிதரேனம்ம தப்பு ஹிடிதவராரு நின்ன**
**க$^1$ட$^3$லஷயனன கிருதங்கி கோலெ |**
**க$^1$ட$^3$லஷயனன கிருதங்கி சுப$^4$த்ரெ**
**உடிய து$^1$ம்பு$^3$வேனு பாரம்ம கோலெ ||203**

நுடிதரேனம்ம = நம் விஷயத்தில் தவறான (அவச்சொற்களை) வார்த்தைகளை பேசினால். தப்பு ஹிடிதவராரு = உன்னை யார் தவறாக நினைப்பார்கள்? நீ தவறு செய்கிறாய் என்று சொல்பவர்கள் யார்? (யாருமில்லை) உனக்கு வெற்றிலை பாக்கு கொடுக்கிறேன் வா. இப்படி வா, சுபத்திரா என்று ருக்மிணி சுபத்திரைக்கு 'உடி-தும்புகிறார்'. [புடவைத் தலைப்பில் அரிசி, மஞ்சள், பாக்கு ஆகிய மங்கல பதார்த்தங்களை நிரப்புவது].

**சரணக்க$^1$ந்தி$^3$கெ$^3$ கெஜ்ஜெ மினகோ$^3$ பீதாம்ப$^3$ர**
**ஸிரிவத்ஸ கந்த$^4$ துளஸிய கோலெ |**
**ஸிரிவத்ஸ கந்த$^4$ துளசி கௌஸ்துபஹார**
**ஸிரிதேவி ரமணகு$^3$டு$^3$கோ$^3$ரெ கோலெ ||204**

ஸ்ரீகிருஷ்ணன் முதலான அனைவருக்காக தான் கொண்டு வந்திருக்கும் பரிசுகளை சுபத்திரை ருக்மிணியிடம் கொடுத்து, நீயே அனைவருக்கும் சரியாக பிரித்துக் கொடுக்கவும் என்றாள்.

சரணக்கந்திகெ = காலுக்கு வளை. கெஜ்ஜெ = சலங்கை. மினகோ பீதாம்பர = பளபளக்கும் பீதாம்பரம். ஸிரிவத்ஸ கந்த துளஸி கௌஸ்துபஹார = ஸ்ரீவத்ஸ சின்னம், சந்தனம், துளசி, முத்து மாலை ஆகியவை. ஸிரிதேவி ரமணகெ உடுகோரெ = லட்சுமிரமணனான ஸ்ரீகிருஷ்ணனுக்கு சமர்ப்பணங்கள் (காணிக்கைகள்).

**னொஸலொளொப்புவ நாம எஸெவ கர்ணகுண்டல**
**மிசுனியந்தொப்புவ வஸனவு கோலெ |**
**மிசுனியந்தொப்புவ முகுட மௌக்திக ஹார**
**வசுதேவ தனயகெ$^{3}$ உடு$^{3}$கோ$^{3}$ரெ கோலெ ||205**

னொஸலொளு = நெற்றியில். ஒப்புவ = இட்டிருக்கும். நாம = திலகம். எஸெவ = வீற்றிருக்கும். மிசுனி = தங்கம். வஸன = வஸ்திரம். முகுட = கிரீடம். என இவை அனைத்தையும் ஸ்ரீகிருஷ்ணனுக்கு அர்ப்பித்தனர்.

**அனர்க்$^{4}$யவாகி$^{3}$ஹ அனந்த$^{1}$ வஸ்த்ராப$^{4}$ரண**
**அனந்தகாலக்கெ தந்தேவு கோலெ |**
**அனந்தகாலக்கெ தந்தேவு லக்ஷ்மீ நிம்ம**
**அனந்த ப$^{3}$ளக$^{3}$க்கெ$^{1}$ கொ$^{1}$டு பா$^{3}$ரெ கோலெ ||206**

அனர்க்யவாகிஹ = விலைமதிப்பற்ற. அனந்தவஸ்த்ராபரண = பற்பல வஸ்திரங்களை, ஆபரணங்களை அனந்தகாலக்கெ = பல நாட்களுக்குப் பிறகு. தந்தேவு = கொண்டு வந்திருக்கிறோம். லக்ஷ்மி - ஹே ருக்மிணி, அனந்தபளகக்கெ = உன் பற்பல சொந்த பந்தங்களுக்கு. கொடு பாரே = இவற்றை நீயே அவர்களின் தகுதிக்குத் தக்கவாறு பிரித்துக் கொடு.

**கந்த$^{4}$குங்கும ஹச்சி தந்த வீள்யவ கொட்டு**
**மந்தஹாஸதல்லி களுஹுத்த கோலெ |**
**மந்தஹாஸதல்லி களுஹுத்த ருக்மிணி**
**ப$^{3}$ந்தளு பா$^{3}$கில ஹொரர ஹொரரடு கோலெ ||207**

சுபத்திரை தான் கொண்டுவந்த பரிசுகளைக் கொடுத்தபிறகு, ருக்மிணி சுபத்திரைக்கு மஞ்சள் குங்குமம் கொடுத்து, வெற்றிலை பாக்கு அளித்து, தகுந்த பரிசுகளைக் கொடுத்து, அவர்களை வழியனுப்ப, அரண்மனையில் வாயில் வரை அவளுடன் நடந்து வந்தார்.

**ஸாகரதனயளெ பூ$^{1}$க$^{3}$ர்ப்ப$^{4}$ன மாதெ**
**நாகா$^{3}$ரிக$^{3}$மனன அர்த்தா$^{4}$ங்கி கோலெ |**
**நாகா$^{3}$ரிக$^{3}$மனன அர்த்தா$^{4}$ங்கி ருக்மிணி**
**ஹோகிபருத்தேனெ த$^{3}$யவிரலி கோலெ ||208**

ருக்மிணியிடம் விடைபெற்றுக் கொண்டு சுபத்திரை, போய் வருகிறேன் என்று சொல்லி புறப்பட்டாள். ஸாகரதனயளெ = சமுத்ரராஜனின் மகளே (லட்சுமிதேவியே). நாகாரிகமனன அர்த்தாங்கி = நாகாரி = சர்ப்பங்களின் எதிரியான கருடன். கருடனில் ஏறி பறப்பவனான (கருடவாகனன்) ஸ்ரீகிருஷ்ணனின் உண்மையான மனைவியே. தயவிரலி = உன் அன்பு (எங்கள் மேல்) இருக்கட்டும்.

**ஹாதி ஹாடல்லஷ்வமேத$^{4}$ பர்வத கதெ$^{2}$**
**சாதுசஜ்ஜனர ப$^{1}$த$^{3}$தூ$^{4}$ளி கோலெ |**
**சாதுசஜ்ஜனர ப$^{1}$த$^{3}$தூ$^{4}$ளி த$^{4}$ரிஸி**
**மேதினியொளித ரசஸிதெ கோலெ ||209**

தாம் இயற்றிய இந்த கோலுஹாடு, நீண்ட பயணத்தில் சோர்வு தெரியாமல் இருக்க, ராகதாளத்துடன் பாடக்கூடிய வெறும் பொழுதுபோக்கு பாடல் அல்ல. மாற்றாக, இது புருஷார்த் தங்களைக் கொடுக்கக்கூடிய மகாபாரதத்தின் அஸ்வமேத பர்வத்தில் வரும் ஒரு கதை என்கிறார் மோகனதாசர். இந்த பாகவத கதையை, சஜ்ஜனர்களின் பாததூளியை தம் சிரசில் தரித்து, சஜ்ஜனர்களின் உலகில் அவர்கள் அனைவரும் பாடுவதற்காக, பரப்புவதற்காக இயற்றியிருக்கிறேன் என்கிறார்.

**ஜயகளாகலி அபஜயகளு போகலி**
**ஜகதேவி ரமணனொலியலி கோலெ |**
**ஜகதேவி ரமணனொலியலி நம்ம வி**
**ஜயதாசார்யரு ஸலஹலி கோலெ ||210**

ஜகதேவியான மகாலட்சுமியின் ரமணன் ஸ்ரீஹரியின் கருணையால், நமக்கு (அனைத்து சஜ்ஜனர்களுக்கும்) வெற்றி

கிட்டட்டும். தோல்வி ஓடிப்போகட்டும். தமது குருகளான விஜயதாசர் அந்த ஸ்ரீஹரியின் அருள் கிடைப்பதற்கு நமக்கு உதவட்டும் என்கிறார் தாசர்.

**மங்களவாகலி அமங்கள போகலி**
**ரங்கன ஒலுமெ தொரெயலி கோலெ |**
**ரங்கன ஒலுமெ தொரெயலி நம்ம துரி**
**தங்கள நில்லதெ ஓடலி கோலெ ||211**

நமக்கு (அனைத்து சஜ்ஜனர்களுக்கும்) மங்களமாகட்டும். அமங்கலங்கள் தூர ஓடிப்போகட்டும். ஸ்ரீஹரியின் தரிசனம் கிடைக்கட்டும். நமது பாவங்கள் அனைத்தும் நம்மை விட்டு விலகட்டும்.

**ஷுபகளாகலி அஷுபகளு ஓடலி**
**இப⁴வரதனொலுமெ தொரெயலி கோலெ |**
**இப⁴வரதனொலுமெ தொரெயலி நம்ம விஜய**
**ப்ரபு⁴கள கீர்த்தி மெரெயலி கோலெ ||212**

இபவரதனொலுமெ = கஜேந்திர வரதனின் (ஸ்ரீஹரியின்) தரிசனம். விஜயபிரபுகள = ஸ்ரீவிஜயதாசரின். கீர்த்தி மெரெயலி = அவரின் புகழ் எப்போதும் ஒளிர்ந்து கொண்டிருக்கட்டும். (அவரின் அருளால் இயற்றப்பட்ட இந்த கிருதியானது, சஜ்ஜனர்களை எப்போதும் மகிழ்விக்கட்டும்). சுபகளாகலி அசுபகளு ஓடலி = அவர்களுக்கு எப்போதும் நன்மையே ஆகட்டும். கெட்டவை ஓடிப்போகட்டும்.

**ஸ்ரீகிருஷ்ண அர்ஜுன சுப⁴த்ரெ ருக்மிணி**
**சாகாரவாகி ஸரஸவ கோலெ |**
**சாகாரவாகி ஸரஸவாடித கதெ²**
**ஸாகலி நம்ம சர்வதா3 கோலெ ||213**

சாகாரவாகி = சாக்ஷாத்தாக தாமே எதிரெதிரில் நின்று ஸ்ரீகிருஷ்ணன், அர்ஜுனன், சுபத்திரை மற்றும் ருக்மிணி ஆகிய

நால்வரும் நடத்திய, சரஸவாடித கதெ = (நமக்காக நடத்தப்பட்ட நாடகம்) கேலியுடன் நடந்த பேச்சுவார்த்தை. சர்வதா சாகலி = அனைவரையும் எப்போதும் காப்பாற்றட்டும். இக்கதையிலிருந்து தெரியவரும் ஶ்ரீகிருஷ்ண - ருக்மிணி அவர்களின் மகிமாஞானமானது, இதை படிப்பவர் / கேட்பவர்களுக்கு பிறப்பு / இறப்பு போன்ற துன்பங்களிலிருந்து விடுதலை அளிக்கட்டும்.

**பார்த்தி²வ வத்ஸர கார்த்திக மாஸத**
**பார்த்தஸாரதி பக்ஷ ஹரிதின கோலெ |**
**பார்த்தஸாரதி பக்ஷ ஹரிதின குருவார**
**பூர்த்தியாகிஹுது ஈ கிருதி கோலெ ||214**

இந்த கிரந்தம் இயற்றி முடித்த நாளை இங்கு சொல்கிறார். பார்த்தசாரதி பக்ஷ என்றால் பார்த்தனின் சாரதி, கிருஷ்ணன். ஆக, கிருஷ்ண பக்ஷம். பார்த்திவ சம்வத்ஸரம், கார்த்திக மாதம், கிருஷ்ண பக்ஷம், ஏகாதசி (ஹரிதின), வியாழக் கிழமையன்று இந்த கிருதி முடிந்திருக்கிறது.

**பூர்ணபோத⁴மதா¹ப்தி⁴ பூர்ணேந்தெனிப சத்ய**
**பூர்ணகுருகள நிஜசிஷ்ய கோலெ |**
**பூர்ணகுருகள நிஜசிஷ்யன க¹வன**
**பூர்ணமாடிஹரு குருகளு கோலெ ||215**

ஶ்ரீமத்வ சாஸ்திரம் என்னும் கடலை, தமது உபதேசம், வியாக்யானம், பிரவசனங்களால் பூர்ணசந்திரனைப் போல ஒளிகொடுத்து அருளிய ஶ்ரீசத்யபூர்ணரின் சிஷ்யர் என்று தாசர் தம்மை சொல்லிக் கொண்டபடியால், ஶ்ரீமோகனதாசரின் காலத்தில் (ஶ்ரீமத் உத்தராதி மடத்து பீடத்தில்) ஶ்ரீசத்யாபினவ தீர்த்தரின் கரகமல சஞ்சாதரான ஶ்ரீசத்யபூர்ண தீர்த்தர் பீடத்தில் இருந்தார் என்று தெரியவருகிறது. இந்த கிரந்தமும் அந்த குருகளின் கருணையினாலேயே முழுமையடைந்திருக்கிறது

என்று சொல்லி, தமது நன்றியினைக் கூறி, தமது குரு பக்தியினை காட்டியிருக்கிறார் தாசர்.

**குருவிஜயராயர கருணாகடாக்ஷதி**
**பரம வைஷ்ணவர தயதிந்த கோலெ |**
**பரம வைஷ்ணவர தயதிந்தலீ கதே²**
**த⁴ரெயொளகெல்ல மெரெயலி கோலெ ||216**

தமக்கு உயிர்ப்பிச்சைக் கொடுத்து, சிறு குழந்தை முதல் பாதுகாத்து வளர்த்து, அபரோக்ஷ ஞானதானம் செய்து பரமானுக்கிரகம் செய்த ஸ்ரீவிஜயதாசார்யரின் கிருபா கடாக்ஷத்துடனும், விஷ்ணுபக்தர்களின் தயையுடனும், இந்த தமது கிருதியானது சஜ்ஜனர்களின் நடுவில் ஆதரிக்கப்பட்டு (மதிக்கப்பட்டு), இந்த கிருதியால் போற்றப்படுபவனான ஸ்ரீகிருஷ்ணன், பக்தர்களின் சர்வாபீஷ்டங்களை நிறைவேற்றட்டும் என்று வேண்டுகிறார் தாசர்.

**பன்னங்கஷயன சுவர்ணகிரீஷ சு**
**வர்ணவாஹன்ன சுக²பூர்ண கோலெ | சு**
**வர்ண்வாஹன்ன சுக²பூர்ணனாத மோ**
**ஹன்னவிட்டல கருணிஸு கோலெ || 217**

பன்னங்கஷயன = நாகத்தின் மேல் படுத்திருப்பவன். சுவர்ண கிரீஷ = வெங்கடாசலபதி. சுவர்ணவாஹன்ன = கருட வாகனன். ஹே பிரபோ! இந்த என் பிரார்த்தனைகளை தயவுசெய்து கேட்டு, நான் மற்றும் அனைத்து சஜ்ஜனர்களும் உன் கருணைக்குப் பாத்திரராகும்படி அருள் செய்வாயாக.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

***

## ஹரிதாச விஜயம் தமிழ் மாத இதழ் சந்தா விவரம் (36 பக்கங்கள்)

1 ஆண்டுக்கு ரூ.200/- 3 ஆண்டுகளுக்கு ரூ.500/-
5 ஆண்டுகளுக்கு ரூ.900/- 10 ஆண்டுகளுக்கு ரூ.1700/-

## வங்கி விபரம்:

Sathya Narayanan

ICICI Bank - Savings account

A/c. No. 000101043177. IFSC: ICIC0000001

Cenotaph Road Branch, Chennai 18

## ஹரிகதாம்ருதசார உரை தமிழ் மொழிபெயர்ப்பு

https://hks-bhavaprakashike.blogspot.in என்னும் இணைய தளத்தில் 'பாவபிரகாசிகை' என்னும் (ஹரிகதாம்ருதசாரத்தின்) கன்னட உரையின் தமிழாக்கம் - தினம் ஒரு பத்யம் - என்று வெளியிடப்பட்டு வருகிறது. அனைவரும் அந்த தளத்தில் முதல் பதிவிலிருந்து - தொடர்ந்து - தினந்தோறும் படிக்க வேண்டும் என்பது எங்களின் வேண்டுகோள். ஹரிகதாம்ருத சாரத்தில் ஈடுபாடுள்ள அனைத்து தமிழ் மாத்வர்களுக்கும் இதனை தயவு செய்து தெரிவிக்கவும்.***